ஸ்ரீ:

ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த
ஸஹஸ்ரநாம பாஷ்யத்தை யடியொற்றி

ஸ்ரீ காஞ்சி. ஜகதாசார்ய

**P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமி**

எழுதிய

---

# விஷ்ணு ஸஹஸ்ர நாமவுரை

---

ஸ்ரீ ஸ்வாமியின் எழுபத்தைந்தாவது
திருநக்ஷத்திர பூர்த்தி
நினைவு மலராக வெளியிடப்பட்டது.



விசுவாவஸு பங்குனி விசாகம்

1966

ஸ்ரீ:

பேரருளாளன்பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

1966-ல் புதுப்பிக்கப்பெற்ற சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் வெளியீடு நெ. 1

# விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை

ஸ்ரீ பட்டரருளிச் செய்த பாஷ்யத்தைத் தழுவி

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரியர் ஸ்வாமி**

எழுதியது

**நான்காம் பதிப்பு**


சென்னை பானு அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது

கிடைக்குமிடம் :—

1. க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.
2. ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை காரியாலயம்,
   213, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,
   ஜி. டி. மதராஸ்.

விசுவாவஸு ௵ தைத்திங்கள் மதிநிறைந்த நன்னாள்

15—2—1966

விலை] [ரூ. 1-50



உரையாசிரியர்:

ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

"வியாக்கியான வாசஸபதி"

# முகவுரை

---

## ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமை

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு த்ரிமதஸ்தர்களாலும் பாஷ்யமியற்றப்பட்டுள்ளது. அவற்றுள் நமது விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயத்திற்கான பாஷ்யம் பட்டருடையதேயாம். அதற்கு **பகவத்குண தர்ப்பண** மென்று திருநாமம் சாத்தினது சாலப் பொருத்தம். குணாநுபவஞ் செய்யக் குதூஹலமுள்ளவர்கள் ஈடுமுப்பத்தாறுயிரப்படியென்கிற பகவத் விஷய திவ்யக்ரந்தத்தில் போது போக்க வேணுமென்பது ப்ரஸித்தம். அதில் அவகாஹிக்க ப்ராப்தியற்ற சுத்தஸம்ஸ்கிருத பண்டிதர்கள் சாஸ்த்ரஜ்ஞானமுள்ளவர்கள் அற்புதமாகக் குணாநுபவஞ்செய்ய விரும்பினல் அவர்களுக்கு பட்டருடைய ஸஹஸ்ரநாம பாஷ்யமே தஞ்சமென்னத்தகும். ஏற்கெனவே ஸஹஸ்ரநாமத்திற்கு சங்கரபாஷ்யம் தோன்றியுள்ளது. நிர்க்குண ப்ரஹ்மவாதிகள் எம்பெருமானுடைய திருநாமங்களுக்கு அர்த்தஞ் சொல்லப்புறப்படுவது ஸாஹஸமென்றே பட்டர் திருவுள்ளம் போலும்.

பகவத்குணங்களை அற்புதமாக அனுபவிப்பதற்கென்றே அமைந்த இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு ஆழ்

வார்களின் ஈரச்சொற்களில் ஆழ்ந்தவர்களன்றோ பொருள் சொல்ல முன்வரவேண்டும்; அவ்வருளிச் செயல்களுக்கு அதிமாத்ரம வைதேசிகர்களான புறச் சமயிகள் இதற்குப் பொருளுரைப்பதாக விழுந்து மனம்போனபடியெல்லாம் வியாக்கியானம் செய்திருப்பது என்னே! என்று மிக வருந்திய பட்டர் தாம் வியாக்யானிக்க எம்பெருமானுருடைய நியமனம் பெற்றிருந்தார். குணாநுபவத்திற்கென்று இட்டுப் பிறந்தவர்களில் தலைவரன்றோ பட்டர். அருளிச்செயலமுதக் கடலில் அல்லும் பகலும் குடைந்தாடி அரும் பெரும் பொருள்களை அற்புதமாக அனுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்த பரமரஸிக ஸார்வபௌமரான பட்டர் அருளிச்செய்த பாஷ்யத்தை நம்மவர்களிலும் பரிபூர்த்தியாக ஸேவிப்பவர்கள் மிகச் சிலரே. உண்மையில் இந்த பாஷ்யத்தை யநுபவிக்க அதிகாரிகள் துர்லபர்கள்; ஏனென்றால் "**பரிசிதமிவ அதாபி கஹநம் பஹுமுகய வாணீ விலஸிதம்**" என்று ஸ்ரீரங்க நாச்சியாரை நோக்கித் தாம் வேண்டினபடியே அதி கம்பீரமான வாக்விலாஸங்களைக் கொண்டே பெரும்பாலும் இந்த பாஷ்யத்தை அமைத்தருளியுள்ளார். ஆகவே இதற்கு அதிகாரிகள் மிகச் சிலரேயாவர். ஒருவாறு அதிகாரம் பெற்றவர்களும் இதைக் கொண்டு போது போக்குவதைக் காணோம். 'அவச்யமான போது எடுத்துப்பார்ப்பது' என்கிறமுறையில் இதை யெடுத்துப் பார்ப்பவர்கள் சிலருளரேயன்றி ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளைப் போலவே இதையும் நியமேந ஸேவிக்கப் பெறுவாரில்லையே யென்கிற நிர்வேதம் நமக்குப் பெரிதுமுளது. திவ்யப்ரபந்தங்களில் அவ

காஹனமில்லாமையோடுகூட அவற்றில் த்வேஷமு முள்ளவர்கள் இந்த பாஷ்யாம்ருத ஸாகரத்தில் இறங் காதிருப்பதே மிக க்ஷேமம் என்றும் நாம் கருதி யிருப்பதுண்டு.

இங்ஙனே நாம் பேசத்தக்க பெருமை இந்த பாஷ் யத்துக்கு உள்ளதென்பதை இங்குச் சிறிது நிரூபிக்க விரும்பி ஸஹஸ்ரநாமத்திலிருந்து சில திருநாமங்களை யெடுத்துக்கொண்டு, பிறருடைய பாஷ்யத்திற்காட்டி லும் பட்டருடைய பாஷ்யத்திலுள்ள ஸ்வாரஸ்யாதி சயத்தை ரஸிகர்களுக்கு அழகாக எடுத்துக்காட்டு கின்றோம்.

**"ஸத்கதிஸ் ஸத்க்ருதிஸ் ஸத்தா ஸத்பூதிஸ் ஸத்பரா யண:"** என்றவிடத்தில் **ஸத்க்ருதி:** என்ற திருநாமத் திற்குப் பிறர் செய்தபொருள் யாதெனில்; ஜகத் ஸ்ருஷ்டி முதலான சிறந்த காரியங்களைச் செய்பவர் என்பது. இப்பொருளை பட்டர் ஒன்றாக மதித்திலர். கீழே * **வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநா ஹவி:** * என்று வாஸுதேவ நாம ச்ரவணமிருப்பதால் இந்த ப்ரகரணத்திலுள்ள பல திருநாமங்கள் வஸுதே வாத்மஜனான கண்ணபிரானுடைய குணசேஷ்டிதங் களைத் தெரிவிப்பனவாகக்கொண்டு * **வஸுரேதா:** * என்கிற திருநாமம் முதலாகப் பல திருநாமங்களை க்ருஷ்ணாவதார கதா ப்ரதிபாதகங்களாகவே பட்டர் வியாக்கியானித்தருளினர். ஸ்பஷ்டமாக இப்படியே அவதாரிகையும் இட்டருளினர். **ஸத்க்ருதி:** என்னு மிந்தத் திருநாமம் அந்த ப்ரகரணத்திலிருப்பதால் இதற் குப் பிறர் செய்த பொருள் விரஸமென்று கருதி, தயிர்

வெண்ணெய் களவு செய்தது. உரலோடாப்புண்டிருந்தது, குரவை யாச்சியரோடு கோத்தது முதலான சிறந்த சேஷ்டிதங்களைச் செய்பவர்-என்கிற அழகிய பொருளைச் செய்தருளினார் பட்டர். ஆண்டாள் திருப்பாவையில் "உன்றன்னைச் சிறு பேரழைத்தனவும் சீறியருளாதே" என்கிறாள். 'கண்ணா! உனக்குப் பெரிய பெரிய பெயர்களிருக்க அவற்றை விட்டுச் சிறிய பெயரை யிட்டு உன்னை யழைத்ததற்காக நீ சீற்றம் கொள்ளலாகாது' என்று இங்கு க்ஷமை வேண்டப்படுகிறது. இங்குச் சிறிய பெயராகக் கருதப்படுவது எது? என்று ஆராயுமளவில் பட்டர் திருவடிகளிலே கேட்ட மஹாசார்யர்கள், **நாராயணன் தேவாதிதேவன்** இத்யாதி நாமங்கள் சிறிய பெயரென்றும், **கோவிந்தன் கோபாலன்** இத்யாதி நாமங்கள் பெரிய பெயரென்றும் அருளிச்செய்கிறார்கள். அவன் உகக்கும் திருநாமம் எதுவோ அதுவே பெருமை பெற்றதென்றும், அவன் வெறுக்கும் பெயரே சிறுமை பெற்றதென்றும் கொள்ள வேண்டியிருக்கிறது. திருவாய்ப்பாடியில் இடையர்க்குத் தலைவனாய் வந்து பிறந்து கன்றுகளையும் காலிகளையும் மேய்த்துப் பெருமை பெற நினைத்திருக்கையில் 'கன்று மேய்த்தினிதுகந்த காளாய்!' என்று கூப்பிட்டால் அவன் திருவுள்ள முகக்குமேயல்லது 'நாராயணா! வைகுண்டவாஸா!' என்றால் உகக்குமோ? மிக மிக வெறுப்பன்றோ உண்டாகும். கோவர்த்தனமலையைக் குடையாகத் தூக்கி நின்றபோது அவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தைக் கண்டு அதிசங்கித்தவர்கள் **"தேவோ வா தாநவோ வா த்வம்?"** (தேவனோ நீ?) என்ன; அதற்கு மிகச் சிறினனன்றோ.

உங்களில் ஒருத்தனைப் இடையனை வெண்ணைத் தேவ னென்று பறிக்கிறீர்களே ப்ராவிகாள்! என்றுயிற்று அண்டர்கோன் சிறியது. இவற்றுக்கெல்லாம் நன்கு பொருந்தவன்றோ பேசவேணும். * நாராயணனே நமக்கே பறைதருவான் * என்றும் * நாற்றத்துழாய் முடி நாராயணன் * என்றும் அநியாயமாய் உன்னைச் சிறு பேரையிட்டுப் பேசினோமே. கோவிந்தன் கோபா லன் என்கிற பெரும் பெயர்களையிட்டே பேசாத பிழையைப் பொறுத்தருள வேணும். என்று சொல்லு வதாகப் பொருள் கொள்வதே பொருத்தமான தென்று கொண்டு ஆசாரியர்கள் இப்படி வியாக்கி யானித்தருளினர்கள். இச் சுவையை யறிய பாக்கிய மற்றவர்கள் இற்றைக்கும் இதற்கு விபரீதமான பொருளை யெழுதியும் பேசியும் வரக் காணா நின்றோம். நிற்க. ரஸிகர்கள் **ஸத்க்ருதி** என்ற ப்ரக்ருத திரு நாமத்தின் பாஷ்யம் அமைந்திருக்குமழகை நோக்க வேணும். ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வியாபாரங்களே பகவானுக்குச் சிறந்தவை யென்கிறார் சங்கராசார்யர்; அவையல்ல சிறந்தவை: * நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூ ணென்னுமீனச்சொல்லே! * என்றும், * காணுயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்ற வானயன் * என்றும் நம் ஆழ்வார்கள் ஈடுபடும் படியான ஈனச்செயல்களே சிறந்தவை யென்கிறார் பட்டர். * மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு எத்திற முரலினோடிணைந்திருந் தேங்கிய எளிவே! * என்று நம்மாழ்வாரை ஆறு மாஸம் மோஹிக்கச்செய்த செயலைவிட்டு மற்றொன் றையா **ஸத்க்ருதி** யென்பது! என்றுயிற்று பட்டர் திருவுள்ளம் பற்றியது.

இனி வேறு திருநாமங்களிற் செல்வோம். "**விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச் சின்னஸம்சய:, உதீர்ணஸ் ஸர்வதச் சக்ஷு ரநீசச் சாச்வத: ஸ்திர:**" என்றவிடத்துள்ள பல திருநாமங்களுக்குப் பிறருடைய பாஷ்யத்தின் சுவையின்மையும் பட்டருடைய பாஷ்யத்தின் சுவைமிகுதியும் நிரூபிக்கப்படுகின்றன. **விஜிதாத்மா** என்பதற்கு மனத்தை யடக்கினவர்—ஜிதேந்திரியர் என்ற கருத்திற் சென்றூர்கள் பிறர். இதில் என்ன சுவையுள்ளது? 'தம் அடிபணிந்தவர்கள் விஷயத்தில் தாம் தாழ்ந்து வெற்றியை அவர்களுக்குக் கொடுத்துத் தோல்வியைத் தாம் ஏற்றுக்கொள்பவர்' என்கிற கருத்தை விவரித்தருளினூர் பட்டர். இதுவன்றோ எம்பெருமான் திருவுள்ளமுகந்த பொருள். "அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் ஆழியங் கண்ணாவுன் கோலப் பாதம்" என்று பக்தர்கள் விரும்பா நிற்க "**மம சிரஸிமண்டநம் கோபிகாதண்டநம்**" என்று பேசின பெருமானது திருவுள்ளமுகக்கும் வியாக்கியானமிதுவன்றோ. "கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா!" என்ற ஆண்டாள் பாசுரத்திற்கு உட்புகுந்து வியாக்கியானம் செய்தருள்கின்ற ஆசாரியர்கள் "கூடாதவர்களைத் தோற்கடிப்பதும் கூடுமவர்களுக்கு நீ தோற்றிருப்பது மன்றோ உன் இயல்பு" என்று கருத்தை விவரித்தருளுகிறூர்கள். அதற்கு வழிகாட்டியாகவுள்ளது இவ்விடத்து பாஷ்யம்.

இதற்கடுத்த திருநாமத்திற் செல்வோம். '**விஜிதாத்மா விதேயாத்மா**' என்ற இவ்விடத்தில் அகாரப்ரச்லேஷமிருப்பதாகக் கொண்டு 'அவிதேயாத்மா' என்று

பதம் பிரித்து அதற்குத்தகுந்த பொருளையுரைத்தனர் பிறர்: [யாருக்கும் விதேயப்படாத ஸ்வரூபமுள்ளவரென்பதாக.] பட்டர் *விதேயாத்மா* என்றே திருநாமமாகக்கொண்டு, நிற்பதோ இருப்பதோ கிடப்பதோ போவதோ வருவதோ உண்பதோ எல்லாவற்றிலும் பக்தர்களினுடைய கட்டளைக்கு விதேயப்பட்டிருக்கும் ஸ்வரூபமுள்ளவர் என்று இவ்வழகிய கருத்தைக்காட்டியருளினர். *கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா! நீ கிடக்க வேண்டா* என்றவாறே பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு கிளம்புவதும், *பைந்நாகப்பாய் விரித்துக்கொள்* என்றால் அப்படியே மீண்டு வந்து விரித்துக்கொள்வதுஞ் செய்து திருமழிசைப் பிரான்போல்வார் திறத்தில் சொன்னவண்ணஞ் செய்த பெருமாளென்றும் யதோக்தகாரி யென்றும் திருநாமம் படைத்து பக்தவிதேயதையை விகிதபடிதமாக்கியிருக்கின்ற எம்பெருமானது திருவுள்ள முகக்கவேணுமானால் **'விதேயாத்மா'** என்றது வேறுவகையாகச் சொல்லலாகுமோ? ***ஜ்ஞாநீது ஆத்மைவமே மதம்*** என்று கீதையிற் கூறியிருக்கின்ற எம்பெருமானுடைய திருவுள்ளந்தான் என்ன? ஞானிகளுக்கு நான் சரீரபூதனென்று ஸர்வசரீரியான பகவான் தானே வாய்விட்டுச் சொல்லுகின்றான். ஆத்மாவைக் குறித்து ஸர்வாத்மநா விதேயமாயிருக்கையன்றோ சரீர லக்ஷணம். ஞானிகளுக்கு விதேயனல்லனாகில், *ஜ்ஞாநீது ஆத்மைவமே மதமென்று அவன்தான் கூறினதும் அதற்கு மஹாசார்யர்கள் அழுத்தம் திருத்தமாக வியாக்கியானமிட்டருளினதும் என்னாகும்? தனது விதேயத்வத்தை

வாயாற் சொன்னவளவன்றிக்கே அனுஷ்டானத்திலு மன்றோ காட்டியருளா நின்றான். **''ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபயமே அச்யுத!''** என்று அர்ஜுனன் கட்டளையிடவும் அப்படியே தான் செய்யவும் பாங்காக வன்றோ தன்னை யமைத்து வைப்பது. **பார்த்தஸாரதி** யென்று பெயர் சுமந்து நிற்கிறானே. நாம் பார்த்த சாரதியன்றோ.

அடுத்த திருநாமத்திலும் செல்வோம். **சிந்நஸம்சய:** என்றொரு திருநாமம், 'எல்லாவற்றையும் கை யிலங்கு நெல்லிக்கனிபோல் எப்போதும் பார்ப்பவரா தலால் ஸந்தேஹமற்றவர்' என்ற கருத்தில் பாஷ்யம் செய்தனர் பிறர். ஐயம் திரிபு மறப்பு முதலானவை யில்லாமை ஞானத்திற்கு அதிசயம். ஆகவே பகவான் அதிசயித்த ஞானம் படைத்தவர் என்றதாயிற்று. இப்பொருள் ஸஹஸ்ரநாமத்தில் மற்றும் பல திரு நாமங்களாலும் வெளிவந்ததே. இதில் சுவையொன்று மில்லையென்று கருதிய பட்டர் அழகாக வியாக்கி யானித்தருளியுள்ளார்! இதற்கு முன்னேயுள்ள **ஸத் கீர்த்தி:** என்ற திருநாமத்திற்குப் பிறர்போல் ஸாமான்ய மான பொருளைப் பணியாமல் 'ஸௌலப்ய மிருப்பதிலே யே யதார்த்தமான புகழைப்பெற்றவர்' என்று ப்ரகரணாநுகுணமாகப் பொருளருளிச் செய்தவராத லால் **சிந்நஸம்சய:** என்றவித் திருநாமத்திற்கும் அதை யொட்டியே அழகிய பொருள் பணிக்கின்றார்! அதா வது எம்பெருமான் விஷயத்தில் தெளிவு பெறாதவர் களுக்குப் பலவகையான ஸந்தேகங்களுண்டாகுமாம்; அவர் அறியக்கூடியவரோ அறியக்கூடாதவரோ;

எளியவரோ அரியவரோ? நமக்கு வசப்படுவரோ மாட்டாரரோ? என்றிப்படி பல ஸந்தேஹங்கள் தோன்றுமாம்; அவற்றைத் தமது நடத்தையினால் உடனே அறுத்திடுபவராம். தாரித்ரிய மின்றியிருப் பவர் என்பதைக் காட்டிலும் பிறரை தாம் தாரித்ரிய மற்றவர்களாகச் செய்பவர் என்பது எப்படி சிறந் ததோ, அப்படியே தாம் ஸந்தேஹமற்றிருப்பவர் என்பதைக் காட்டிலும் பிறரை ஸந்தேஹமற்றவர் களாகச் செய்பவர் என்பது சிறந்ததென்று நாம் விவரிக்க வேணுமோ? அதிலும், தம்முடைய பரத் வத்தைக்காட்டி ஸந்தேஹ மறுப்பவரென்னுமல் தம் முடைய எளிமையைக் காட்டி ஸந்தேஹ மறுப்பவ ரென்றுரைத்தது ரஸவத்தரம்.

அவ்விடத்திலேயே **அநீச:** என்ற திருநாமத்தின் பாஷ்யத்தையும் நோக்குவது. 'தமக்குமேல் ஈச்வர னில்லாதவர் அநீசர்' என்றுர் பிறர். 'தமக்குத்தாம் கடவரல்லாதவர் - பக்த பராதீநத்வத்தாலே ஸ்வாதந் த்ரியமிழந்தவர் அநீசர் என்றருளிச் செய்கிறுர் பட்டர். * வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பர் * என்று ஆண்டாளருளிச் செய்தபடி பக்தர்கள் வெந்நீரைக் காய்ச்சி, * நாரணா நீராட வாராய் * இன்று நீ நீராடவேண்டு மெம்பிரானேடா தேவாராய் * என்றழைத்தால் நீராட வோடிவரு வதும், சில பூக்களைப் பறித்துக் கையிலே வைத்துக் கொண்டு * செண்பகப் பூச்சூட்ட வாராய் * என்றும் * இருவாட்சிப் பூச்சூட்ட வாராய் * என்றுமழைத் தால் பூச்சூடவோடி வருவதுமான எம்பெருமானை

எந்த பாஷ்ய முகப்பிக்கு மென்று ரஸிகர்கள் விமர் சிக்கக் கடவர்கள்.

இனி மற்றோரிடத்திற்குச் செல்வோம். * வஸுர் வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ் ஸம: * என்ற விடத்தில் * அஸம்மித: * என்று திருநாமமாக்கி அபரிச்சிந்நர் என்கிற பொருளைக் காட்டினர் பிறர். விலை கொடுத்து வினை வாங்குமாப்போலே இல்லாத தொரு அகாரத்தைக்கொண்டு கூட்டி எதுக்கு இந்தச் சுவைக்கேடான பொருளைப் பணிக்க வேண்டு மென்று நிர்வேதங்கொண்ட பட்டர் ஸம்மித: என்றே கொண்டு * ஸர்வப்ரகாரத்தாலும் அடியார்களுக்குப் பரிச்சிந் நரேயாவர் என்கிறார். * அழுகையு மஞ்சி நோக்குமந் நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத் திறுதி கண்டாளே * என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தில் 'தொல்லை யின்பத்து இறுதி கண்டாள்'- என்பதற்கு தொல்லையின்பமாகிய பகவானை [அபரிச் சிந்நனென்று ஓதிக்கிடப்பதற்குப் பிரதியாக]ப் பரிச் சிந்நனாகக் கண்டாள் யசோதை-என்று சொல்லிப் போருவதொரு இன்சுவைப் பொருளுக்கு ஆகரம் பட்டரேயாவர்.

* நியந்தா நியமோ யம: * என்கிற விடத்திலும் * ஆதார நிலயோதாதா * என்கிற விடத்திலும் "அநி யம:- நியம:," அயம:- யம: "அதாதா - தாதா" என்று இரண்டுபடியாகவும் பதச்சேதம் செய்து வியாக் யானமிட்ட பிறர் * விஜிதாத்மா விதேயாத்மா *

என்ற விடத்திலுங்கூட அப்படியே இரண்டு விதமாக வும் பதச்சேதம் பண்ணி இரண்டுவகைப் பொருள் களையும் காட்டலாமாயிருந்தும் ஏன் காட்டவில்லை? என்று ஆராயுமளவில், பகவத் குணங்களிலே ஆழங் கால்படுவதற்கிடான திவ்ய ப்ரபந்தரூப அம்ருதஸாகர அவகாஹனம் பட்டர்க்குப்போல் பிறர்க்கு இல்லாமை யினால் தான் ஸ்ரீ வைஷ்ணவர்கள் எளிதாக அறுதி யிடலாம்.

பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டு வகுப்பு களுக்குரிய பெருமைகளும் எம்பெருமானிடத்து உள் ளன. இரண்டையும் அநுபவிக்க நாம் இட்டுப் பிறந் திருக்கிறோம். ஆனாலும் அநுபவத்தில் நெஞ்சை நீர்ப் பண்டமாக்குமவை எளிமைக் குணங்களேயன்றிப் பரத்வகுணங்களல்ல. நம்மாழ்வார் * உயர்வற வுயர் நலமுடையவன் * என்று தொடங்கிப் பரத்வத்தை யநுபவித்தவர் சிறிதும் விகாரமடையாமல் பேசிப் போந்தார்; அவர்தாமே * எத்திறமுரலினோடிணைந் திருந் தேங்கிய வெளிவே * என்றும் * பிறந்தவாறும் வளர்ந்தவாறும் * என்றும் பேசி அவ்வாறுமாஸம் மோஹித்து உணர்த்தியற்றுக் கிடந்தார். இதனையே ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில், * **தாத்ருக் ந தே சரிதம் ஆர்யஜநாஸ் ஸஹந்தே** * என்றும் * **ஆர்த்ரீகரோதி விதுஷாம் ஹ்ருதயம் ததேதத்** * என்றுமருளிச் செய்தார். ஆகவே எளிமைக் குணங்களையே பெரும்பாலும் விவரிக்க நம் ஆசார்யர்கள் குதுகலிக்கின்றார்கள்— இதுவே ஆழ்வார் காட்டியருளின வழியென்று கொண்டு.

இதனால் பரத்வத்திற்கு உள்ளீடான குணங்களில் இவர்கள் பகையும் பொருமையுமுடையவர்களென்று அர்த்தமல்ல. அக் குணங்களையும் அபரிமிதமாக அருளிச்செய்தே போருகிருர்கள். எளிமைக்குணங் களை யநுபவிக்க இடம் வாய்ப்பாகக் கிடைக்குமானல் அவ்விடத்தையுபேக்ஷியாது நன்கு பற்றுகிருர்கள்.

உருக்கமான அர்த்தவிசேஷங்களை யருளிச் செய் வதில் எம்பெருமானுரைக் காட்டிலும் பட்டர் மிக வல்லவரென்பது பகவத்விஷய திவ்யக்ரந்த ரஸிகர் களுக்கு அறியவெளிது. மஹாமேதாவியான இவரு டைய புத்திக்கு அநாயாஸமாக கோசரிக்கும் பொருள் மற்றையோருடைய புத்திக்கு ச்ரமப்பட்டும் க்ரஹிக்க முடியாதென்ருல் இது அதிசயோக்தி யன்று; சில விடங்களைக் கொண்டு இதையும் ஸூதலிப்போம்.

இந்த ஸஹஸ்ரநாமத்திலே * **அர்த்தோ நர்த்தோ மஹாகோசஃ** * என்றவிடத்தில் **அநர்த்த**ஃ என்கிற திரு நாமத்தை வியாக்கியானிக்கிற பிறர் 'தாம் விரும்ப வேண்டிய பொருளில்லாதவர்' என்று உரைத்தனர். இது நம்போல்வார்க்கும் தோற்றக்கூடிய பொருளே. பட்டர் அருளிய பொருளோவென்னில்; அற்ப பலன் களை விரும்பக்கூடிய பாக்கிய **ஹீனர்**களால் விரும்பப் படாதவர் — என்பதாக. இதற்கடுத்தபடியாகவுள்ள **மஹாகோச**ஃ என்கிற திருநாமத்திற்கு 'அந்நமய ப்ராண மயாதிகளான ஐந்து மஹாகோசங்களில் இருப்பவர்' என்கிற பொருள் பிறரால் உரைக்கப்பட்டது. அர்த்திகளான பக்தர்களுக்கு அளவிறந்து கொடுத்

தாலுங்கூட ஒருநாளும் குறைபடாத நவநிதிகளையும் ரத்நாகரங்களையும் தம்முடைய பொக்கிசமாகவுடையவர்' என்பது பட்டரருளிச் செய்த பொருள். இப்படியாக நாம் எடுத்தனுபவிக்கக்கூடிய அற்புதமான பொருள்கள் அளவு கடந்து விளங்குகின்றன இவ்வாசிரியருடைய பாஷ்யத்தில். ...... *

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பட்டருடைய பாஷ்யத்தைப் பெரும்பாலும் தழுவி இவ்வுரை எழுதப்பட்டுள்ளது. அந்த பாஷ்யத்தில் கண்ட பொருள்கள் சிலவிடங்களில் ஸுகுமாரமதிகளின் புத்திக்கு எட்டாத வகையில் அமைந்திருப்பதால் அவ்விடங்களில் ஒருவாறு எழுத நேர்ந்து விட்டது. அப்படிப்பட்ட விடங்கள் மிகவும் ஸ்வல்பமேயாம்.

இவ்வுரையிலுள்ள குற்றங்குறைகளைப் பெரியார் பொறுத்தருளிக் குணலேசமிருந்தால் கண்டு களிப்பது. ... ... *

இங்ஙனம்

**ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர்,**

உரையாசிரியர்

ஸ்ரீ:

# ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் மூலம்

ஹரி: ஓம்

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்,
ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே.
யஸ்ய த்விரத வக்த்ராத்யா: பாரிஷத்யா: பரச்சதம்,
விக்நம் நிக்நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாச்ரயே.
வ்யாஸம்வஸிஷ்டநப்தாரம்சக்தே:பௌத்ரமகல்மஷம்,
பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம்.
வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே.
நமோவை ப்ரஹ்மநிதயே வாஸிஷ்டாய நமோநம:.
அவிகாராய சுத்தாய நித்யாய பரமாத்மநே,
ஸதைக ரூப ரூபாய விஷ்ணவே ஸர்வ ஜிஷ்ணவே.
யஸ்ய ஸ்மரண மாத்ரேண ஜந்ம ஸம்ஸார பந்தநாத்,
விமுச்யதே நமஸ் தஸ்மை விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே.
ஓம் நமோ விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே.

### ஸ்ரீ வைசம்பாயந உவாச—

ச்ருத்வா தர்மாந் அசேஷேண பாவநாநிச ஸர்வச:,
யுதிஷ்டிரச் சாந்தநவம் புநரேவாப்யபாஷத.

### யுதிஷ்டிர உவாச—

கிமேகம் தைவதம் லோகே கிம்வாப்யேகம் பராயணம்,
ஸ்துவந்த: கம் கமர்ச்சந்த: ப்ராப்நுயுர் மாநவாச் சுபம்.
கோ தர்மஸ் ஸர்வ தர்மாணாம் பவத: பரமோ மத:,
கிம்ஜபந் முச்யதே ஜந்துர் ஜந்மஸம்ஸார பந்தநாத்.

**ஸ்ரீ பீஷ்ம உவாச—**

ஜகத்ப்ரபும் தேவ தேவ மநந்தம் புருஷோத்தமம்,
ஸ்துவந் நாம ஸஹஸ்ரேண புருஷஸ் ஸததோத்தித꞉.
தமேவ சார்ச்சயந் நித்யம் பக்த்யா புருஷமவ்யயம்,
த்யாயந் ஸ்துவந் நமஸ்யம்ச்ச யஜமானஸ் தமேவச.
அநாதி நிதநம் விஷ்ணும் ஸர்வலோக மஹேச்வரம்,
லோகாத்யக்ஷம்ஸ்துவந்நித்யம்ஸர்வதுக்காதிகோபவேத்.
ப்ரஹ்மண்யம் ஸர்வதர்மஜ்ஞம் லோகாநாம் கீர்த்திவர்த்த
லோகநாதம் மஹத்பூதம் ஸர்வபூத பவோத்பவம். [நம்,
ஏஷ மே ஸர்வதர்மாணும் தர்மோதிகதமோ மத꞉,
யத் பக்த்யா புண்டரிகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந் நரஸ்
பரமம்யோமஹத்தேஜ꞉பரமம்யோமஹத்தப꞉, [ஸதா.
பரமம் யோ மஹத்ப்ரஹ்ம பரமம்ய꞉ பராயணம்.
பவித்ராணும் பவித்ரயம்யோ மங்களாநாஞ்ச மங்களம்,
தைவதம் தேவதாநாஞ்ச பூதாநாம் யோவ்யய꞉ பிதா.
யதஸ் ஸர்வாணி பூதாநி பவந்த்யாதி யுகாகமே.
யஸ்மிம்ச்ச ப்ரளயம் யாந்தி புநரேவ யுகக்ஷயே.
தஸ்ய லோக ப்ரதாநஸ்ய ஜகந்நாதஸ்ய பூபதே.
விஷ்ணோர்நாம ஸஹஸ்ரம்மே ச்ருணு பாபபயாபஹம்.
யாநிநாமாநி கௌணாநி விக்க்யாதாநி மஹாத்மந꞉
ரிஷிபி꞉ பரிகீதாநி தாநிவக்ஷ்யாமி பூதயே.
விஷ்ணோர்நாம ஸஹஸ்ரஸ்ய வேதவ்யாஸோ மஹாந்ரிஷி꞉,
சந்தோநுஷ்டுப் ததா தேவோ பகவாந் தேவகீஸுத꞉.
அம்ருதாம்சூத்பவோ பீஜம் சக்திர் தேவகிநந்தன꞉
த்ரிஸாமாஹ்ருதயம்தஸ்ய சாந்த்யர்த்தே விநியுஜ்யதே꞉
விஷ்ணும்ஜிஷ்ணும்மஹாவிஷ்ணும்ப்ரபவிஷ்ணும்மஹேச்
அநேகரூப தைத்யாந்தம் நமாமி புருஷோத்தமம். [வரம்.

அஸ்ய ஸ்ரீவிஷ்ணோர் திவ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய ஸ்ரீவேதவ்யாஸோ பகவாந் ரிஷி:, அநுஷ்டுப்ச்சந்த:. ஸ்ரீ மஹாவிஷ்ணு: பரமாத்மா ஸ்ரீமந்நாராயணோ தேவதா, அம்ருதாம்சூத்பவோ பாநுரிதி பீஜம், தேவகீ நந்தனஸ்ஸ்ரஷ்டேதி சக்தி:, உத்பவ: க்ஷோபணோதேவ: இதி பரமோமந்த்ர:, சங்கப்ருந்நந்தகீ சக்ரீதி கீலகம், சார்ங்கதந்வாகதாதர இத்யஸ்த்ரம், ரதாங்கபாணி: அக்ஷோப்யஇதி நேத்ரம், த்ரிஸாமாஸாமகஸ்ஸாமேதி கவசம், ஆநந்தம் பரப்ரஹ்மேதி யோநி:, ருதுஸ் ஸுதர்சந: கால இதி திக்பந்த:, ஸ்ரீவிச்வரூப இதித்யாநம், ஸ்ரீமஹாவிஷ்ணுகைங்கர்ய ரூபே ஸ்ரீஸஹஸ்ரநாமஜபே விநியோக:.

## த்யாநம்

க்ஷீரோதந்வத்ப்ரதேசே சுசிமணிவிலஸத் ஸைகதே மௌக்திகாநாம் மாலாக்லுப்தாஸநஸ்தஸ் ஸ்படிக மணிநிபைர் மௌக்திகைர் மண்டிதாங்க:, சுப்ரைரப்ரைரதப்ரை ருபரிவிரசிதைர் முக்தபீயூஷவர்ஷை: ஆநந்தீ ந: புநீயாதரிநளிநகதா சங்கபாணிர்முகுந்த: ॥

பூ: பாதௌ யஸ்ய நாபிர் வியதஸுரநிலச் சந்த்ர ஸூர்யௌச நேத்ரே கர்ணாவாசாச்சிரோத்யௌர் முகமபிதஹநோ யஸ்ய வாஸ்தேயமப்தி:. அந்தஸ்தம் யஸ்யவிச்வம் ஸுரநரககோ போகிகந்தர்வ தைத்யை: சித்ரம் ரம்ரம்யதே தம் த்ரிபுவநவபுஷம் விஷ்ணுமீசம் நமாமி. சாந்தாகாரம் புஜகசயநம் பத்மநாபம் ஸுரேசம் விச்வாகாரம் ககநஸத்ருசம் மேகவர்ணம் சுபாங்கம், லக்ஷ்மீகாந்தம் கமலநயநம் யோகிபிர் த்யாநகம்யம் வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைகநாதம்.

மேகச்யாமம் பீதகௌசேயவாஸம்
ஸ்ரீவத்ஸாங்கம் கௌஸ்துபோத் பாஸிதாங்கம்,
புண்யோபேதம் புண்டரீகாயதாக்ஷம்
விஷ்ணும்வந்தே ஸர்வலோகைகநாதம்.

---

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ஓம்.விச்வம்விஷ்ணுர்வஷட்காரோபூதபவ்யபவத்ப்ரபு:
பூதக்ருத் பூதப்ருத் பாவோ பூதாத்மா பூதபாவந:. 1
பூதாத்மா பரமாத்மாச முக்தாநாம் பரமாகதி:,
அவ்யய: புருஷஸ் ஸாக்ஷீ க்ஷேத்ரஜ்ஞோக்ஷர ஏவ ச. 2
யோகோ யோகவிதாம்நேதா ப்ரதாநபுருஷேச்வர:.
நாரஸிம்ஹவபுச் ஸ்ரீமாந் கேசவ: புருஷோத்தம:. 3
ஸர்வச் சர்வச் சிவஸ் ஸ்தாணுர் பூதாதிர் நிதிரவ்யய:.
ஸம்பவோ பாவநோ பர்த்தா ப்ரபவ: ப்ரபுரீச்வர:. 4
ஸ்வயம்பூச்சம்புராதித்ய: புஷ்கராக்ஷோமஹாஸ்வந:,
அநாதிநிதநோ தாதா விதாதா தாதுருத்தம:. 5
அப்ரமேயோ ஹ்ருஷீகேச: பத்மநாபோமரப்ரபு:.
விச்வகர்மாமநுஸ்த்வஷ்டாஸ்தவிஷ்டஸ்ஸ்தவிரோத்ருவ:.
அக்ராஹ்யச் சாச்வத:க்ருஷ்ணோலோஹிதாக்ஷ:ப்ரதர்தந:,
ப்ரபூதஸ் த்ரிக்குத்(ப்)தாமா பவித்ரம் மங்களம் பரம், 7
ஈசாந:ப்ராணத:ப்ராணோஜ்யேஷ்டச்ச்ரேஷ்ட:ப்ரஜாபதி
ஹிரண்யகர்ப்போ பூகர்ப்போ மாதவோ மதுஸூதந:.
ஈச்வரோ விக்ரமீ தந்வீ மேதாவீ விக்ரம: க்ரம:,
அநுத்தமோ துராதர்ஷ: க்ருதஜ்ஞ: க்ருதிராத்மவாந்:
ஸுரேசச்சரணம் சர்ம விச்வரேதா: ப்ரஜாபவ:,
அஹஸ் ஸம்வத்ஸரோ வ்யாள:ப்ரத்யயஸ் ஸர்வதர்சந:,

அஜஸ் ஸர்வேச்வரஸ் ஸித்தஸ் ஸித்திஸ் ஸர்வாதிரச்யுத꞉
வ்ருஷாகபி ரமேயாத்மா ஸர்வயோக விநிஸ்ஸ்ருத꞉. 11
வஸுர் வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ் ஸம꞉.
அமோக꞉ புண்டரீகாக்ஷோ வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி꞉.
ருத்ரோ பஹுசிரா பப்ருர் விச்வயோநிச் சுசிச்ரவா꞉,
அம்ருதச் சாச்வதஸ் தாணுர் வராரோஹோ மஹாதபா꞉.
ஸர்வகஸ் ஸர்வவித்பாநுர் விஷ்வக்ஸேநோ ஜநார்த்தந꞉,
வேதோ வேதவிதவ்யங்கோ வேதாங்கோ வேதவித் கவி꞉.
லோகாத்யக்ஷஸ் ஸுராத்யக்ஷோ தர்மாத்யக்ஷக்ருதாக்ருத꞉
சதுராத்மா சதுர்வ்யூஹச் சதுர்தம்ஷ்ட்ரச் சதுர்ப்புஜ꞉. 15

ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா ஸஹிஷ்ணுர்
[ஜகதாதிஜ꞉,
அநகோ விஜயோ ஜேதா விச்வயோநி꞉ புநர்வஸு꞉. 16
உபேந்த்ரோ வாமந꞉ ப்ராம்சு ரமோகச் சுசி ரூர்ஜித꞉,
அதீந்த்ரஸ் ஸங்க்ரஹஸ் ஸர்கோ த்ருதாத்மா நியமோ யம꞉.
வேத்யோ வைத்யஸ் ஸதாயோகீ வீரஹா மாதவோ மது꞉
அதீந்த்ரியோ மஹாமாயோ மஹோத்ஸாஹோ மஹாபல꞉.
மஹாபுத்திர் மஹாவீர்யோ மஹாசக்திர் மஹாத்யுதி꞉,
அநிர்தேச்யவபுச் ஸ்ரீமாநமேயாத்மா மஹாத்ரித்ருக். 19
மஹேஷ்வாஸோ மஹீபர்த்தா ஸ்ரீநிவாஸஸ் ஸதாம்கதி꞉,
அநிருத்தஸ் ஸுராநந்தோ கோவிந்தோ கோவிதாம்பதி꞉
மரீசிர் தமநோ ஹம்ஸஸ் ஸுபர்ணோ புஜகோத்தம꞉.
ஹிரண்யநாபஸ் ஸுதபா꞉ பத்மநாப꞉ ப்ரஜாபதி꞉. 21
அம்ருத்யுஸ் ஸர்வத்ருக் ஸிம்ஹஸ் ஸந்தாதா ஸந்தி
மாந் ஸ்திர꞉,
அஜோ துர்மர்ஷணச் சாஸ்தா விச்ருதாத்மா ஸுராரிஹா.
குருர் குருதமோ தாம ஸத்யஸ் ஸத்யபராக்ரம꞉,
நிமிஷோ நிமிஷஸ் ஸ்ரக்வீ வாசஸ்பதி ருதாரதீ꞉. 23

அக்ரணீர் க்ராமணீச் ஸ்ரீமாந் ந்யாயோ நேதா ஸ்மீரண:, ஸஹஸ்ரமூர்த்தா விச்வாத்மா ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத் 24. ஆவர்த்தநோ நிவ்ருத்தாத்மா ஸம்வ்ருதஸ் ஸம்ப்ரமர்த்தந:, அஹஸ்ஸம்வர்த்தகோ வஹ்நி ரநிலோ தரணீதர: 25. ஸுப்ரஸாத: ப்ரஸந்நாத்மா விச்வ ஸ்ருக்(ட்) விச்வபுக்விபு:, ஸத்கர்த்தா ஸத்க்ருதஸ் ஸாதுர் ஜஹ்நுர்நாராயணோ நர: 26. அஸங்க்யேயோ ப்ரமேயாத்மா விசிஷ்டச் சிஷ்டக்ருச்சுசி:, ஸித்தார்த்தஸ் ஸித்தஸங்கல்பஸ் ஸித்திதஸ் ஸித்தி ஸாதந: 27. வ்ருஷாஹீ வ்ருஷபோ விஷ்ணுர் வ்ருஷபர்வா வ்ருஷோதர:, வர்த்தநோ வர்த்தமாநச்ச விவிக்தச் ச்ருதிஸாகர: 28. ஸுபுஜோ துர்த்தரோ வாக்மீ மஹேந்த்ரோ வஸுதோ வஸு:, நைகரூபோ ப்ருஹத்ரூபச் சிபிவிஷ்ட: ப்ரகாசந: 29. ஓஜஸ்தேஜோ த்யுதிதர: ப்ரகாசாத்மா ப்ரதாபந:, ரித்தஸ் ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரச் சந்த்ராம்சுர் பாஸ்கரத்யுதி: 30. அம்ருதாம்சூத்பவோபாநுச் சசபிந்துஸ் ஸுரேச்வர:, ஔஷதம் ஜகதஸ் ஸேதுஸ் ஸத்யதர்ம பராக்ரம: 31. பூதபவ்ய பவந்நாத: பவந: பாவநோ நல:, காமஹா காமக்ருத் காந்த: காம: காமப்ரத: ப்ரபு: 32. யுகாதிக்ருத் யுகாவர்த்தோ நைகமாயோ மஹாசந:, அத்ருச்யோ வ்யக்தரூபச்ச ஸஹஸ்ரஜிதநந்தஜித் 33. இஷ்டோ விசிஷ்டச் சிஷ்டேஷ்டச் சிகண்டீ நஹுஷோ வ்ருஷ:, க்ரோதஹா க்ரோதக்ருத்கர்த்தா விச்வபாஹுர் மஹீதர: 34. அச்யுத: ப்ரதித: ப்ராண: ப்ராணதோ வாஸவாநுஜ:, அபாந்நிதி ரதிஷ்டாந மப்ரமத்த: ப்ரதிஷ்டித: 35. ஸ்கந்தஸ் ஸ்கந்ததரோ துர்யோவரதோ வாயுவாஹந:, வாஸுதேவோ ப்ரு

ஹத்பாநு ராதிதேவ: புரந்தர: 36. அசோகஸ் தார ணஸ் தாரச்சூரச் சௌரிர் ஜநேச்வர:, அநுகூலச் சதாவர்த்த: பத்மீ பத்மநிபேக்ஷண: 37. பத்மநாபோ ரவிந்தாக்ஷ: பத்ம கர்ப்பச் சரீரப்ருத், மஹர்த் திருத்தோ வ்ருத்தத்மா மஹாக்ஷோ கருடத்வஜ: 38 அதுலச் சரபோ பீமஸ் ஸமயஜ்ஞோ ஹவிர்ஹரி:, ஸர்வ லக்ஷண லக்ஷண்யோ லக்ஷ்மீவாந் ஸமிதிஞ்ஜய: 39. விக்ஷரோ ரோஹிதோ மார்கோஹேது தாமோதரஸ் ஸஹ:, மஹீதரோ மஹாபாகோ வேகவாநமிதாசந: 40. உத்பவ: க்ஷோபணோ தேவச் ஸ்ரீகர்ப்ப: பரமேச்வர:, கரணம் காரணம் கர்தா விகர்தா கஹநோ குஹ: 41. வ்யவஸாயோ, வ்யவஸ்தாநஸ் ஸம்ஸ்தான ஸ்தாநதோ த்ருவ:, பரர்த்தி: பரமஸ்பஷ்ட ஸ்துஷ்ட: புஷ்டச்சு பேக்ஷண: 42. ராமோ விராமோ விரதோ மார்கோ நேயோ நயோநய:, வீரச்ச க்திமதாம் ச்ரேஷ்டோ தர்மோ தர்ம விதுத்தம: 43. வைகுண்ட: புருஷ: ப்ராண: ப்ராணத: ப்ரணம: ப்ருது:, ஹிரண்யகர்பச் சத்ருக்நோ வ்யாப்தோ வாயுரதோக்ஷஜ: 44. ருதுஸ் ஸுதர்சந: கால: பரமேஷ்டீ பரிக்ரஹ:, உக்ரஸ்ஸம் வத்ஸரோ தக்ஷோ விச்ராமோ விச்வதக்ஷிண: 45. விஸ்தார: ஸ்தாவரஸ்தாணு: ப்ரமாணம் பீஜமவ்யயம், அர்த்தோ நர்த்தோ மஹாகோசோ மஹாபோகோ மஹாதன: 46. அனிர்விண்ண: ஸ்தவிஷ்டோ பூர்தர்ம யூபோ மஹாமக:, நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ க்ஷம: க்ஷா மஸ் ஸமீஹந: 47. யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யச்ச க்ரதுஸ் ஸத்ரம் ஸதாம்கதி:, ஸர்வதர்சி நிவ்ருத்தாத்மா ஸர்வஜ்ஞோ ஜ்ஞாநமுத்தமம் 48. ஸுவ்ரதஸ் ஸுமு கஸ் ஸூக்ஷ்மஸ் ஸுகோஷஸ் ஸுகதஸ ஸுஹ்ர

ருத், மநோஹரோ ஜிதக்ரோதோ வீரபாஹுர் விதாரண: 49. ஸ்வாபந: ஸ்வவசோ வ்யாபீ நைகாத்மா நைககர்மக்ருத், வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ ரத்நகர்ப்போ தநேச்வர: 50. தர்மகுப் தர்மக்ருத் தர்மீ ஸதஸத்க்ஷரமக்ஷரம், அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சுர் விதாதா க்ருதலக்ஷண: 51. கபஸ்திநேமிஸ் ஸத்வஸ்தஸ் ஸிம்ஹோ பூதமஹேச்வர: ஆதிதேவோ மஹாதேவோ தேவேசோ தேவப்ருத்குரு: 42. உத்தரோ கோபதிர்கோப்தா ஜ்ஞாநகம்ய: புராதந:, சரீரபூதப்ருத் போக்தா கபீந்த்ரோ பூரிதக்ஷிண: 53. ஸோமபோம்ருதபஸ் ஸோம: புருஜித் புருஸத்தம:, விநயோ ஜயஸ் ஸத்யஸந்தோ தாசார்ஹஸ் ஸாத்வதாம் பதி: 54. ஜீவோ விநயிதாஸாக்ஷீ முகுந்தோ மிதவிக்ரம:, அம்போநிதி ரநந்தாத்மா மஹோததிசயோந்தக: 55. அஜோ மஹார்ஹஸ் ஸ்வாபாவ்யோ ஜிதாமித்ர: ப்ரமோதந:, ஆநந்தோநந்தநோ நந்தஸ் ஸத்யதர்மா த்ரிவிக்ரம: 56. மஹர்ஷி: கபிலாசார்ய: க்ருதஜ்ஞோ மேதிநீபதி:, த்ரிபதஸ் த்ரிதசாத்யக்ஷோ மஹாச்ருங்க: க்ருதாந்தக்ருத் 57. மஹாவராஹோ கோவிந்தஸ் ஸுஷேண: கநகாங்கதீ, குஹ்யோ கபீரோ கஹநோ குப்தச் சக்ரகதாதர: 58. வேதாஸ் ஸ்வாங்கோஜித: க்ருஷ்ணோ த்ருடஸ் ஸங்கர்ஷணோச்யுத:, வருணோ வாருணோ வ்ருக்ஷ: புஷ்கராக்ஷோ மஹாமநா: 59. பகவாந் பகஹா நந்தீ வநமாலீ ஹலாயுத:, ஆதித்யோ ஜ்யோதிராதித்யஸ் ஸஹிஷ்ணுர் கதிஸத்தம: 60. ஸுதந்வா கண்டபரசுர் தாருணோ த்ரவிணப்ரத:, திவிஸ்ப்ருக் ஸர்வத்ருக் வ்யாஸோ வாசஸ்பதிரயோநிஜ: 61. த்ரிஸாமா ஸாமகஸ் ஸாம நிர்வாணம்

பேஷஜம் பிஷக், ஸந்யாஸக்ருச் சமச் சாந்தோ நிஷ்டா சாந்தி: பராயணம் 62.

சுபாங்கச் சாந்திதஸ் ஸ்ரஷ்டா குமுத: குவலேசய:, கோஹிதோ கோபதிர் கோப்தா வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரிய: 63. அநிவர்த்தீ நிவ்ருத்தாத்மா ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருச்சிவ:, ஸ்ரீவத்ஸவக்ஷாச் ஸ்ரீவாஸச் ஸ்ரீபதிச் ஸ்ரீமதாம்வர: 64. ஸ்ரீதச் ஸ்ரீசச் ஸ்ரீநிவாஸச் ஸ்ரீநிதிச் ஸ்ரீவிபாவந:, ஸ்ரீதரச் ஸ்ரீகரச் ச்ரேயச் ஸ்ரீமாந் லோகத்ரயாச்ரய: 65. ஸ்வக்ஷஸ் ஸ்வங்கச் சதாநந்தோ நந்திர் ஜ்யோதிர் கணேச்வர:, விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச் சிந்நஸம்சய: 66. உதீர்ணஸ் ஸர்வதச் சக்ஷுரநீசச் சாச்வதஸ் ஸ்திர:, பூசயோ பூஷணோபூதி ரசோகச் சோகநாசந: 67. அர்ச்சிஷ்மா நர்ச்சித: கும்போ விசுத்தாத்மா விசோதந:, அநிருத்தோப்ரதிரத: ப்ரத்யும்நோமிதவிக்ரம: 68. காலநேமி நிஹா சௌரிச் சூரச்சூரஜநேச்வர:, த்ரிலோகாத்மா த்ரிலோகேச: கேசவ: கேசிஹா ஹரி: 69. காமதேவ: காமபால: காமீ காந்த: க்ருதாகம:, அநிர்தேச்யவபுர் விஷ்ணுர் வீரோநந்தோ தநஞ்சய: 70.

ப்ரஹ்மண்யோ ப்ரஹ்மக்ருத்ப்ரஹ்மா ப்ரஹ்ம ப்ரஹ்மவிவர்த்தந:, ப்ரஹ்மவித் ப்ராம்மணோப்ரஹ்மீ ப்ரஹ்மஜ்ஞோ ப்ராஹ்மணப்ரிய: 71. மஹாக்ரமோ மஹாகர்மா மஹாதேஜா மஹோரக:, மஹாக்ரதுர் மஹாயஜ்வா மஹாயஜ்ஞோ மஹாஹவி: 72. ஸ்தவ்யஸ் ஸ்தவப்ரியஸ்ஸ்தோத்ரம் ஸ்துதஸ் ஸ்தோதா ரணப்ரிய:, பூர்ண: பூரயிதா புண்ய: புண்யகீர்த்தி ரநாமய: 73. மநோஜவஸ் தீர்த்தகரோ வஸுரேதா

வஸுப்ரத:, வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநா ஹவி: 74. ஸத்கதிஸ் ஸத்க்ருதிஸ்ஸத்தா ஸத்பூதிஸ் ஸத்பராயண:, சூரஸேநோ யதுச்ரேஷ்டஸ் ஸந்நிவாஸஸ் ஸுயாமுந: 75. பூதாவாஸோ வாஸுதேவஸ் ஸர்வாஸுநிலயோநல:, தர்ப்பஹா தர்ப்பதோத்ருப்தோ துர்த்தரோதாபராஜித: 76. விச்வமூர்த்திர் மஹாமூர்த்திர் தீப்தமூர்த்தி ரமூர்த்திமாந்:, அநேகமூர்த்தி ரவ்யக்தச் சதமூர்த்திச் சதாநந: 77. ஏகோ நைகஸ்தவ:க:கிம் யத்தத் பதமநுத்தமம், லோகபந்துர் லோகநாதோ மாதவோ பக்தவத்ஸல: 78.

ஸுவர்ணவர்ணோ ஹேமாங்கோ வராங்கச் சந்தநாங்கதி. வீரஹா விஷமச் சூந்யோ க்ருதாசீ ரசலச் சல: 79. அமாநீ மாநதோ மாந்யோ லோகஸ்வாமீ த்ரிலோக த்ருத். ஸுமேதா மேதஜோ தந்யஸ் ஸத்யமேதா தராதர: 80. தேஜோவ்ருஷோ த்யுதிதரஸ் ஸர்வசஸ்த்ரப்ருதாம்வர:, ப்ரக்ரஹோ நிக்ரஹோ வ்யக்ரோ நைகச்ருங்கோ கதாக்ரஜ: 81. சதுர்மூர்த்திச் சதுர்பாஹுச் சதுர்வ்யூஹச் சதுர்கதி:, சதுராத்மா சதுர்ப்பாவச் சதுர்வேதவிதேகபாத் 82. ஸமாவர்த்தோ நிவ்ருத்தாத்மா துர்ஜயோ துரதிக்ரம:, துர்லபோ துர்கமோ துர்கோ துராவாஸோ துராரிஹா.83. சுபாங்கோ லோகஸாரங்கஸ் ஸுதந்துஸ்தந்துவர்த்தந:, இந்த்ரகர்மா மஹாகர்மா க்ருதகர்மா க்ருதாகம: 84. உத்பவஸ் ஸுந்தரஸ் ஸுந்தோ ரத்நநாபஸ் ஸுலோசந:, அர்க்கோ வாஜஸநீச் ச்ருங்கீ ஜயந்தஸ் ஸர்வவிஜ்ஜயீ 85. ஸுவர்ணபிந்து ரக்ஷோப்

யஸ் ஸர்வவாகீச்வரேச்வர:, மஹாஹ்ரதோ மஹா கர்த்தோ மஹாபூதோ மஹாநிதி: 86.

குமுத: குந்தர: குந்த: பர்ஜந்ய: பாவநோநில:, அம்ருதாசோம்ருதவபுஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வதோமுக: 87. ஸுலபஸ்ஸுவ்ரதஸ்ஸித்தச் சத்ருஜித் சத்ருதாபந:, ந்யக்ரோதோ தும்பரோச்வத்தச் சாணூராந்த்ரநிஷூதந: 88. ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஜிஹ்வஸ் ஸப்தைதாஸ் ஸப்தவாஹந:, அமூர்த்திரநகோ சிந்த்யோ பயக்ருத் பயநாசந: 89. அணுர் ப்ருஹத் க்ருசஸ்ஸ்தூலோ குணப்ருந்நிர்குணோ மஹாந், அத்ருதஸ் ஸ்வத்ருதஸ் ஸ்வாஸ்ய: ப்ராக்வம்சோ வம்சவர்தந: 90. பாரப்ருத் கதிதோயோகீ யோகீசஸ் ஸர்வகாமத:, ஆச்ரமச்ச்ரமண: க்ஷாமஸ் ஸுபர்ணோ வாயுவாஹந: 91. தநுர்த்தரோ தநுர்வேதோ தண்டோ தமயிதா தம:, அபராஜிதஸ் ஸர்வஸஹோ நியந்தா நியமோ யம: 92. ஸத்வவாந் ஸாத்விகஸ் ஸத்யஸ் ஸத்யதர்மபராயண:, அபிப்ராய: ப்ரியார்ஹோர்ஹ: ப்ரியக்ருத் ப்ரீதிவர்த்தந: 93. விஹாயஸகதிர் ஜ்யோதிஸ் ஸுருசிர் ஹுதபுக்விபு:, ரவிர்விரோசநஸ் ஸூர்யஸ் ஸவிதா ரவிலோசந: 94.

அநந்தஹுதபுக் போக்தா ஸுகதோ நைகதோக்ரஜ:, அநிர்விண்ணஸ் ஸதாமர்ஷீ லோகாதிஷ்டாநமத்புத: 95. ஸநாத்ஸநாதநதம: கபில: கபிரவ்யய:, ஸ்வஸ்திதஸ் ஸ்வஸ்திக்ருத் ஸ்வஸ்தி ஸ்வஸ்திபுக் ஸ்வஸ்திதக்ஷிண: 96. அரௌத்ர: குண்டலீ சக்ரீ விக்ரம்யூர்ஜிதசாஸந:, சப்தாதிகச் சப்தஸஹச் சிசிரச் சர்வரீகர: 97. அக்ரூர: பேசலோ தக்ஷோ தக்ஷிண: க்ஷமி

ஞும்வர:, வித்வத்தமோ விதபய: புண்யச்ரவணகீர்த்
தந: 98. உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ துஸ்
வப்நநாச:, வீரஹா ரக்ஷணஸ்ஸந்தோ ஜீவந: பர்ய
வஸ்தித: 99. அநந்தரூபோநந்தஸ்ரீர் ஜிதமந்யுர்பயா
பஹ:, சதுரச்ரோ கபீராத்மா விதிசோ வ்யாதிசோ
திச: 100. அநாதிர்பூர்புவோலக்ஷ்மீஸ் ஸுவீரோ
ருசிராங்கத:, ஜநநோ ஜநஜந்மாதிர் பீமோ பீமபராக்
ரம: 101. ஆதார நிலயோ தாதா புஷ்பஹாஸ: ப்ர
ஜாகர:, ஊர்த்வகஸ்ஸத்பதாசார: ப்ராணத: ப்ரணவ:
பண: 102. ப்ரமாணம் ப்ராணநிலய: ப்ராண த்ருத்
ப்ராண ஜீவந:, தத்வம் தத்வவிதேகாத்மா ஜந்மம்
ருத்யுஜராதிக: 103. பூர்ப்புவஸ் ஸ்வஸ்தருஸ்தாரஸ்
ஸவிதா ப்ரபிதாமஹ:, யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்வா
யஜ்ஞாங்கோ யஜ்ஞவாஹந: 104. யஜ்ஞப்ருத் யஜ்ஞ
க்ருத்யஜ்ஞீ யஜ்ஞபுக் யஜ்ஞஸாதந:, யஜ்ஞாந்தக்ருத்
யஜ்ஞகுஹ்ய மந்நமந்நாத ஏவ ச 105. ஆத்மயோநிஸ்
ஸ்வயஞ்ஜாதோ வைகாநஸ் ஸாமகாயந:, தேவகீநந்த
நஸ் ஸ்ரஷ்டா க்ஷிதீச: பாபநாசந: 106. சங்கப்ருந்
நந்தகீ சக்ரீ சார்ங்கதந்வா கதாதர:, ரதாங்கபாணி
ரக்ஷோப்யஸ் ஸர்வப்ரஹரணாயுத:. ஓம் 108

ஸ்ரீ ஸர்வப்ரஹரணாயுத ஓம் நம இதி.

வநமாலீ கதீசார்ங்கீ சங்கீ சக்ரீச நந்தகீ.
ஸ்ரீமாந் நாராயணோ விஷ்ணுர் வாஸுதேவோபிரக்ஷது.

## பலச்ருதி

இதீதம் கீர்த்தநீயஸ்ய கேசவஸ்ய மஹாத்மநஃ,
நாம்நாம் ஸஹஸ்ரம் திவ்யாநாம் அசேஷேணப்ரகீர்த்திதம்.
யஇதம் ச்ருணுயாந்நித்யம் யச்சாபி பரிகீர்த்தயேத்,
நாசுபம் ப்ராப்நுயாத்கிஞ்சித் ஸோமுத்ரேஹச மாநவஃ.
வேதாந்தகோப்ராம்மணஸ்ஸ்யாத்க்ஷத்ரியோவிஜயீபவேத்,
வைச்யோ தநஸம்ருத்தஸ்ஸ்யாச்சூத்ரஸ்ஸுகமவாப்நுயாத்.
தர்மார்த்திப்ராப்நுயாத்தர்மமர்தார்த்தீசார்த்தமாப்நுயாத்,
காமாநவாப்நுயாத்காமீ ப்ரஜார்த்தீசாப்நுயாத்ப்ரஜாஃ.
பக்திமாந்யஸ் ஸதோத்தாய சுசிஸ்தத்கதமாநஸஃ,
ஸஹஸ்ரம் வாஸுதேவஸ்ய நாம்நாமேதத்ப்ரகீர்த்தயேத்.
யசஃ ப்ராப்நோதி விபுலம் ஜ்ஞாதி ப்ராதாந்யமேவச.
அசலாம் ச்ரிய மாப்நோதி ச்ரேயஃ ப்ராப்நோத்யநுத்தமம்.
நபயம் க்வசிதாப்நோதி வீர்யம்தேஜச்ச விந்ததி.
பவத்யரோகோத்யுதிமாந் பலரூப குணாந்விதஃ.
ரோகார்த்தோ முச்யதே ரோகாத் பந்தோமுச்யேத [பந்தநாத்.
பயாந்முச்யேத பீதஸ்து முச்யேதாபந்ந ஆபதஃ.
துர்காண்யதிதரத்யாசு புருஷஃ புருஷோத்தமம்,
ஸ்துவந்நாமஸஹஸ்ரேண நித்யம்பக்திஸமந்விதஃ.
வாஸுதேவாச்ரயோ மர்த்யோ வாஸுதேவபராயணஃ,
ஸர்வபாப விசுத்தாத்மா யாதிப்ரஹ்ம ஸநாதநம்.
நவாஸுதேவபக்தாநாம் அசுபம் வித்யதே க்வசித்.
ஜந்மம்ருத்யு ஜராவ்யாதி பயம் நைவோபஜாயதே.
இமம்ஸ்தவ மதீயாநச் ச்ரத்தாபக்தி ஸமந்விதஃ,
யுஜ்யேதாத்மாஸுகக்ஷாந்தி ஸ்ரீத்ருதி ஸ்ம்ருதிகீர்த்திபிஃ.
நக்ரோதோ நசமாத்ஸர்யம் நலோபோ நாசுபாமதிஃ,
பவந்தி க்ருதபுண்யாநாம் பக்தாநாம் புருஷோத்தமே.

த்யௌஸ்ஸசந்த்ரார்க்கநக்ஷத்ராகம் திசோபூர்மஹோததி:
வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதாநி மஹாத்மந:.
ஸஸுராஸுரகந்தர்வம் ஸயக்ஷோரக ராக்ஷஸம்,
ஜகத்வசே வர்த்ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம்.
இந்த்ரியாணிமநோபுத்திஸ் ஸத்வம்தேஜோபலம் த்ருதி:,
வாஸுதேவாத்மகாந்யாஹு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ [ஏவ ச.
ஸர்வாகமாநாமாசார: ப்ரதமம் பரிகல்பித:,
ஆசார ப்ரபவோ தர்மோ தர்மஸ்யப்ரபுரச்யுத:.
ரிஷய: பிதரோ தேவா மஹாபூதாநி தாதவ:,
ஜங்கமா ஜங்கமம் சேதம் ஜகந்நாராயணோத்பவம்,
யோகஜ்ஞாநம் ததா ஸாங்க்யம் வித்யாச்சில்பாதிகர்மச,
வேதாச்சாஸ்த்ராணி விஜ்ஞாநமேதத்ஸர்வம்ஜநார்தநாத்.
ஏகோவிஷ்ணுர் மஹத்பூதம் ப்ருதக்பூதாந்யநேகச:,
த்ரீம்லோகாந் வ்யாப்யபூதாத்மா புங்க்தேவிச்வபுகவ்யய:.
இமம்ஸ்தவம்பகவதோ விஷ்ணோர் வ்யாஸேந கீர்த்திதம்,
படேத்ய இச்சேத்புருஷச் ச்ரேய: ப்ராப்தும் ஸுகாநிச.
விச்வேச்வர மஜம் தேவம் ஜகத: ப்ரபுமவ்யயம்.
பஜந்தி யே புஷ்கராக்ஷம் ந தே யாந்தி பராபவம்.
நதேயாந்திபராபவம் ஓம்நம இதி.

அர்ஜுந உவாச—

பத்மபத்ர விசாலாக்ஷ பத்மநாப ஸுரோத்தம,
பக்தாநாமநுரக்தாநாம் த்ராதா பவ ஜநார்தந.

ஸ்ரீ பகவாநுவாச—

யோ மாம் நாமஸஹஸ்ரேண ஸ்தோதுமிச்சதி பாண்டவ,
ஸோஹமேகேந ச்லோகேந ஸ்துத ஏவ ந ஸம்சய:.
ஸ்துத ஏவ ந ஸம்சய ஓம்நமஇதி.

**வ்யாஸ உவாச—**

வாஸநாத்வாஸுதேவஸ்ய வாஸிதம் தே ஜகத்த்ரயம்,
ஸர்வபூதநிவாஸோஸி வாஸுதேவ நமோஸ்துதே.

ஶ்ரீ வாஸுதேவ நமோஸ்துத ஓம் நம இதி.

**பார்வத்யுவாச—**

கேநோபாயேந லகுநா விஷ்ணோர்நாம ஸஹஸ்ரகம்:
பட்யதே பண்டிதைர்நித்யம் ச்ரோதுமிச்சாம்யஹம்
[ப்ரபோ.

**ஈச்வர உவாச—**

ஶ்ரீராம ராம ராமேதி ரமேராமே மநோரமே,
ஸஹஸ்ரநாமதத்துல்யம் ராமநாம வராநநே.

ஶ்ரீ ராமநாம வராநந ஓம் நம இதி.

**ப்ரஹ்மோவாச—**

நமோஸ்த்வநந்தாய ஸஹஸ்ரமூர்த்தயே
ஸஹஸ்ர பாதாக்ஷி ஶிரோரு பாஹவே,
ஸஹஸ்ர நாம்நே புருஷாய சாச்வதே
ஸஹஸ்ரகோடி யுகதாரிணே நம:.

ஶ்ரீ ஸஹஸ்ரகோடி யுகதாரிண ஓம் நம இதி.

**ஸஞ்ஜய உவாச—**

யத்ரயோகேச்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்தர:,
தத்ர ஶ்ரீர்விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர்மம.

**ஸ்ரீபகவாந் உவாச—**

அநந்யாச்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே.
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்.
பரித்ராணாய ஸாதூநாம் விநாசாயச துஷ்க்ருதாம்.
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.

ஆர்த்தா விஷண்ணாச்சிதிலாச்ச பீதா:
கோரேஷுச வ்யாதிஷு வர்த்தமாநா:
ஸங்கீர்த்ய நாராயண சப்தமாத்ரம்
விமுக்ததுக்காஸ் ஸுகிநோ பவந்து.

ஓம் தத்ஸத்.

இதி ஸ்ரீமஹாபாரதே சதஸாஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம்
வையாஸிக்யாம் ஆநுசாஸநிகபர்வாந்தர்கத தானதர்ம
பர்வணி பீஷ்மயுதிஷ்டிர ஸம்வாதே
ஸ்ரீ விஷ்ணோர் திவ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்.
ஸம்பூர்ணம்.

**சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் பதிப்பு**
**213, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,**
**ஜி. டி. மதராஸ்.**

ஸ்ரீ:

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம அகராதி

---

[இங்கே காட்டப்பட்ட எண்கள் நாமங்களின் எண்கள்]

அக்ரணீ : 220
அக்ரஜ : 892
அக்ராஹ்ய : 56
அக்ரூர : 915
அச்யுத: 101, 320, 557
அசல : 751
அசிந்த்ய : 836
அசோக : 337, 537
அணு : 839
அத்புத : 896
அத்ருத : 846
அத்ருப்த : 719
அத்ருச்ய : 305
அதம : 865
அதிஷ்டானம் : 325
அதீந்த்ர : 159
அதீந்த்ரிய : 171
அதுல : 356
அதோக்ஷஜ : 416
அந்தக : 523
அந்நம் : 983
அந்நாத : 984
அநக : 148, 835
அநந்த : 665, 889
அநந்தரூப : 932
அநந்தஜித் : 308
அநந்த ஸ்ரீ : 933
அநந்தஹுதபுக்
போக்தா : 889
அநந்தாத்மா : 521
அநய : 401
அநர்த்த : 432
அநல : 294, 716
அநாதி : 841
அநாதிநிதந : 42
அநாமய : 694
அநிமிஷ : 216
அநிர்த்தேச்யவபு: 179, 662
அநிர்விண்ண : 436, 893
அநிருத்த : 187, 644
அநில : 236, 818
அநிவர்த்தீ : 603
அநீச : 632
அநுகூல : 344
அநுத்தம : 81
அநேகமூர்த்தி : 726
அப்ரதிரத : 645
அப்ரமத்த : 327
அப்ரமேய : 46
அப்ரமேயாத்மா : 249
அபராஜித : 721, 866
அபாம்நிதி : 325
அபிப்ராய : 875
அம்போநிதி : 520

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத் திருநாமங்களின்

அகராதி யட்டவணை முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசார்ய த்ராவிட க்ரந்தமாலையில்
இருநூற்றறுபதாவது மலர்

# விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை

ஆசிரியர் :

ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான்

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள்

கிடைக்குமிடம் :—

க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்

1965

விலை] [ரூ. 1-25

ஸ்ரீ:

## உரைகாரரின் விண்ணப்பம்

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸஹஸ்ரநாமத்திற்கு பாஷ்யம் செய்தருளினவர் கூரத்தாழ்வான் திருக்குமாரராகிய ஸ்ரீபராசர பட்டர். இவருடைய பாஷ்யமானது மிகவும் கம்பீரமானது. இவ்வாசிரியர் ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களாகிற அமுதக் கடலில் ஆழ்ந்தவராதலால் இன்சுவையே வடிவெடுத்த பாஷ்யத்தை யருளிச் செய்துள்ளார். எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவிப்பதற்கு இந்த பாஷ்யமே ஏற்ற கருவியாகும். ஆசிரியர் இந்தத் தமது பாஷ்யத்திற்கு **பகவத்குணதர்ப்பணம்** என்று திருநாமம் சாத்தியது மிகப் பொருந்தும்.

ஏற்கெனவே ஆதிசங்கராசார்யஸ்வாமிகளும் ஒரு பாஷ்யமியற்றியுள்ளார். அதற்குமிதற்கும் பாட பேதங்கள் பலவுண்டு. பொருள்வாசியும் பெரிதுமுண்டு. நம்முடைய இந்தத் தமிழுரையானது பெரும்பாலும் பட்டருடைய பாஷ்யத்தைத் தழுவியெழுதப் பட்டது. சிற்சிலவிடங்களில் மாத்திரம் பொருள் எளிதாகப் புலப்படுவதற்காகச் சிறிது மாற்றியுரைக்கப்பட்டிருக்கின்றது.

"இந்தத் திருநாமத்திற்கு இந்தப் பொருள் எப்படி பொருந்தும்?" என்கிற ஸந்தேஹம் பலவிடங்களில் பண்டிதர்களுக்குத் தோன்றக்கூடும்; வியாகரண சாஸ்த்ரப்படி ப்ரக்ருதி ப்ரத்யயங்களை விளங்க நிரூபித்துக் காட்டியே, அந்த ஸந்தேஹத்தைத் தீர்க்க வேண்டிய அவசியமுண்டு. அது செய்யுமிடத்து உரை மிகவும் விரிந்துவிடுமென்றும், தமிழர்களுக்கு அந்த விரிவு ரஸிக்கமாட்டாதென்றும் கருதி ஒருவாறு பொருளை மாத்திரமே தெரிவித்திருக்கின்றோம்.

ஸ்ரீரஸ்து
ஸ்ரீமதே ஹயக்ரீவாய நம:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீ விஷ்ணு ஸ்ஹஸ்ரநாமம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

எழுதிய

## பொருள் விளக்கத்துடன் கூடியது

1 **விச்வம் :** எல்லாப் பொருள்களுமாயிருப்பவர்.

2 **விஷ்ணு :** ஸகல சேதநா சேதநங்களிலும் அந்தர்யாமியாய் உட்புகுந்திருப்பவர்.

3 **வஷட்கார:** தாம் வியாபித்திருக்கப்பெற்ற பொருள்களையெல்லாம் தம் நினைவின்படி நடக்குமாறு வசப்படுத்தியிருப்பவர்.

4 **பூதபவ்யபவத்ப்ரபு :** பூத பவிஷ்யத் வர்த்தமானங்களான அனைத்துக்கும் இறைவர்.

5 **பூதக்ருத்** ஸகல பதார்த்தங்களையும் தம் ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிப்பவர்.

6 **பூதப்ருத்** ஸ்ருஷ்டித்த வுலகங்களை யெல்லாம் தாங்கி நிற்பவர்.

7 **பாவ :** எல்லாப் பொருள்களையும் தமக்கு அணியாகக் கொண்டிருப்பவர்.

8 **பூதாத்மா** ஸகல பூதங்களையும் சரீரமாகக் கொண்டவர்.

9 **பூதபாவந:** தாங்குவது, போஷிப்பது, போகங்களைக் கொடுப்பது ஆகிய இவற்றால் எல்லாப் பொருள்களையும் அபிவிருத்தி செய்பவர்.

10 **பூதாத்மா** கரும பலன்களையநுபவிக்கும் ஜீவாத்மா போலல்லாமல் தாம் கரும பலன்களை யநுபவியாத பரிசுத்த ஸ்வபாவமுள்ளவர்.

11 **பரமாத்மா** தமக்கு ஓர் ஆத்மா இல்லாதபடியிருப்பவர்; தமக்கும் தாமே ஈச்வரர்.

12 **முக்தாநாம் பரமா கதி:** முக்தி பெற்றவர்களுக்கு முடிவாகச் சேருமிடமா யிருப்பவர்.

13 **அவ்யய:** முக்தர்கள் தம்மை விட்டுப் பிரியாதிருக்கப் பெற்றவர்.

14 **புருஷ:** ஸர்வஸ்வதானம் செய்பவர் — முக்தர்களுக்கு ஸ்வாநுபவமாகிற பரமாநந்தத்தைக் கொடுப்பவர்.

15 **ஸாக்ஷீ** பரமானந்தம் பெற்ற முக்தர்களைத் தாமும் பரமானந்தத்துடன் பார்த்திருப்பவர்.

16 **க்ஷேத்ரஜ்ஞ:** முக்தர்களுடையும் க்ஷேத்ரமாகிய நித்ய விபூதியை அறிந்திருப்பவர்.

17 **அக்ஷர:** முக்தர்கள் அநுபவிக்க அநுபவிக்கக் கரைகடந்த கல்யாண குணங்கள் மேன்மேலும் புலப்படுவதனால் அநுபவானந்தம் முடிவு பெறாமல் அபிவிருத்தியாம்படி யிருப்பவர்.

18 **யோக:** முக்திக்குத் தாமே உபாயமானவர்.

19 **யோகவிதாம் நேதா** உபாயாந்தரமாகிய பக்தி யோகத்தைப் பற்றினவர்களுக்கும் பலனுண்டாம்படி நிர்வஹிக்குமவர்.

20 **ப்ரதாநபுருஷேச்வர:** ப்ரக்ருதியையும் அதில் கட்டுண்ட ஜீவர்களையும் நிர்வஹிப்பவர்.

21 **நாரஸிம்ஹவபு:** நரங்கலந்த சிங்கமாய்த் திருவவதாரம் செய்தவர்.

22 **ஸ்ரீமாந்** அந்த நரஸிம்ஹாவதாரத்தில் 'அழகியான் தானே' என்னும்படியாக இருப்பவர்.

23 **கேசவ:** குழலழகர்.

24 **புருஷோத்தம:** பத்த முக்த நித்யர்களென்கிற மூவகைச் சேதநர்களிற் காட்டிலும் மிகவுயர்ந்தவர்.

25 **ஸர்வ:** ஸகல சராசரங்களையும் தாமாகவே நினைத்து நடத்துமவர்.

26 **சர்வ:** தமக்கு உடலாகவுள்ள பிராணிகளின் தீங்குகளைச் சிதற அடிப்பவர்.

27 **சிவ:** பிராணிகளுக்கு மங்களகரராயிருப்பவர்.

28 **ஸ்தாணு:** நிலை நின்றிருப்பவர்—நிலை நின்ற பலன்களைத் தருமவர் - நிலை நின்ற அநுக்ரஹமுடையவர்.

29 **பூதாதி:** எல்லாப் பிராணிகளாலும் தாமே பரம புருஷார்த்தமாக ஆவலோடு அடையப்படுமவர்.

30 **நிதிரவ்யய:** (அவ்யய: நிதி:) வைத்தமாநிதி யானவர்.

31 **ஸம்பவ:** பொற்புதையல்போல் உள்ளே மறைந் திருப்பவராயினும் காலதேச விசேஷங்களில் பல அவதாரங்களைச் செய்பவர்.

32 **பாவந:** அப்படிப்பட்ட அவதாரங்களில் துன்பங்களைப் போக்கி இன்பங்களை யளித்து உய்விப்பவர்.

33 **பர்த்தா:** தம்மைத் தந்து ரக்ஷிக்கும் ஸ்வபாவ முள்ளவர்.

34 **ப்ரபவ:** ப்ரக்ருஷ்டமான (மிகச் சிறந்த) ஜனன முடையவர் - சிந்தனை செய்தமாத்திரத்திலேயே ஸகல பாபங்களும் தொலையும்படியான சிறப்பு வாய்ந்த அவதாரங்களைச் செய்பவர்.

35 **ப்ரபு:** மநுஷ்யாதி ஸஜாதியங்களான அவ்வ வதாரங்கள் தன்னிலும் சிறந்த பலன்களையளிக்க ஆற்றல் பெற்றவர்.

36 **ஈச்வர:** அவ்வவதாரங்களில் ஈச்வரத்தன்மை விசேஷமாகப் பயன்படும்படி யிருப்பவர்.

37 **ஸ்வயம்பூ:** நாம் கருமங் காரணமாகப் பிறப்பது போலன்றிக்கே தாமே தமது கருணையினால் அவதரிப்பவர்.

38 **சம்பு:** ஸௌசீல்ய ஸௌலப்ய ஸௌந்தர்யாதி குணங்களைக் காட்டிப் பேரின்பமளிப்பவர்.

39 **ஆதித்ய:** ஸூர்யமண்டலத்தில் காட்சி தருபவர்.

40 புஷ்கராக்ஷ : செந்தாமரைக் கண்ணர்.

41 மஹாஸ்வந : சிறந்த வேதவொலியையுடையவர்.

42 அநாதிநிதந : ஆதியும் அந்தமுமில்லாதவர்—நித்யயுவாவாக உள்ளவர்.

43 தாதா நான்முகக் கடவுளை சரீரமாகக் கொண்டவர்.

44 விதாதா நான்முகனையும் படைப்பவர்.

45 தாதுருத்தம : அந்த நான்முகனிற் காட்டிலும் மிகச் சிறந்தவர்.

46 அப்ரமேய : அந்த நான்முகக் கடவுளுக்கும் உள்ளபடி உணர நிலமல்லாதவர். (* நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணடிக் கமலந்தன்னை அயன் * என்ற பொய்கையார் பாசுரத்தின்படி.)

47 ஹ்ருஷீகேச : இந்திரியங்களுக்கெல்லாம் நியாமகர்-நமது செவி, வாய், கண் முதலான இந்திரியங்கள் தம் பக்கலிலேயே அந்வயிக்க வேண்டியவர்.

48 பத்மநாப : நான்முகனுக்குப் பிறப்பிடமான கமலத்தைத் திருநாபியிலே உடையவர்.

49 அமரப்ரபு : நான்முகன் முதலிய தேவர்கட்கும் அதிகார பதவிகளைக் கொடுத்து நடத்துமவர்.

50 விச்வகர்மா உலக வியாபாரங்களெல்லாம் தமது செய்கைகளாகவே யிருப்பவர்.

51 மநு: ஸங்கல்ப சக்தி வாய்ந்தவர்.

52 த்வஷ்டா உலகங்களைத் தேவமநுஷ்யாதி விசித்ர நாமரூபங்களுள்ளவையாக வகுப்பவர்.

53 ஸ்தவிஷ்ட: ஸ்தூலரூபமுள்ளனவாகக் காண் கின்ற ஸகல பதார்த்தங்களும் தாமாக விரிந் திருப்பவர்.

54 ஸ்தவிர: என்ஞான்றும் நிலைநின்றிருப்பவர்.

55 த்ருவ: பலவகை யுலகங்களாக மாறியும் தமது ஸ்வரூபம் கெடாமல் ஒரே நிலையாயிருப்பவர்.

56 அக்ராஹ்ய: க்ரஹிக்க முடியாதவர்.

57 சாச்வத: உலகங்களின் படைப்பளிப்புத்துடைப் புத் தொழில்கள் இடைவிடின்றி எக்காலமும் தொடர்ச்சியாக நடந்துவருவதனால் ஓய்வு இல்லாதவர்.

58 க்ருஷ்ண: ஜகத் ஸ்ருஷ்டி லீலாரஸத்தினால் எப் போதும் மகிழ்ச்சி கொண்டிருப்பவர்.

59 லோஹிதாக்ஷ: மேற்குறித்த மகிழ்ச்சிக்கு அறி குறியாகத் தாமரைபோற் சிவந்த திருக்கண் களை யுடையவர்.

60 ப்ரதர்தந: பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பவர்.

61 ப்ரபூத: ஒன்றுலொன்று குறைவில்லாமே எல் லாம் நிரம்பப் பெற்றிருப்பவர்.

62 **த்ரிககுத்தாமா** த்ரிபாத்விபூதி யென்னப்படும் பரமபதத்தை இடமாகக் கொண்டவர்.

63 **பவித்ரம்:** பரிசுத்தமான ஸ்வரூபம்.

64 **மங்கலம் பரம்:** மங்கள குணங்களே நிரம்பின ஸ்வரூபம்.

65 **ஈசாந:** ஸர்வ நிர்வாஹகத்திற்குரிய ஸர்வசக்தி ஒரு காலத்திலும் குறையாதிருப்பவர்.

66 **ப்ராணத:** நித்ய கைங்கரியம் செய்வதற்குரிய சக்தியை நித்யஸூரிகளுக்கு அளிப்பவர்.

67 **ப்ராண:** தம்மைக் கிட்டினவர்கட்கு உயிரா யிருப்பவர்.

68 **ஜ்யேஷ்ட:** எல்லாவற்றிற்கும் முதல்வராகை யாலே மிகவும் மூதியவர்.

69 **ச்ரேஷ்ட:** நித்ய ஸூரிகள் எப்போதும் துதிக்க நின்றதனால் மிக வீறு பெற்றவர்.

70 **ப்ரஜாபதி:** மிகச் சிறந்துள்ளவர்களான நித்ய ஸூரிகளுக்குத் தலைவர்.

71 **ஹிரண்யகர்ப்ப:** ஹிரண்யமென்றும் பொன்னுல கென்றும் சொல்லப்படுகிற பரமபதத்தில் வாழ் பவர்.

72 **பூகர்ப்ப:** பூமிதேவிக்கு ஒரு கெடுதல் வாராதபடி காத்தல் செய்பவர்.

73 **மாதவ:** திருமா மகள் கொழுநன்.

74 **மதுஸூதந:** மதுவென்னும் அசுரனைக் கொன்ற வர்; நித்யஸூரிகளின் இந்திரியங்களுக்கு மது

வென்று பெயர்; அவற்றை யடக்கியாள்பவர் —அவற்றுக்குத் தம்மையே இலக்காக்குபவர்.

75 **ஈச்வர:** தாம் நினைத்தது தடைபடாமலிருக்கப் பெற்றவர்.

76 **விக்ரமீ** பராக்ரமமுள்ளவர்.

77 **தந்வீ** *சார்ங்கமென்னும் வில்லாண்டான்.

78 **மேதாவீ** இயற்கையான ஸர்வஜ்ஞத்வம் வாய்ந்தவர்.

79 **விக்ரம:** பக்ஷிராஜனை வாஹனமாகக் கொண்டு உலாவுபவர். (**வி** - பறவை யரசன்.)

80 **க்ரம:** எல்லாவற்றையும் வியாபித்திருப்பவர்.

81 **அநுத்தம:** தம்மில் மிக்கார் யாருமில்லாதவர்.

82 **துராதர்ஷ:** கடல்போல மிக ஆழ்ந்திருப்பதனால் கலக்கமுடியாதவர் - யார்க்கும் வெல்லமுடியாதவர்.

83 **க்ருதஜ்ஞ:** நாம் செய்யும் அற்ப பூஜைகளையும் பெரிதாகத் திருவுள்ளத்திற் கொள்ளுமவர்.

84 **க்ருதி:** *என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே* என்னும்படியாக தம்மைச் சிந்திக்க எண்ணமுண்டாவதற்குக் காரணமாகிய ஸுக்ருதம் தாமேயாயிருப்பவர்.

85 **ஆத்மவாந்:** அப்படிப்பட்ட ஸுக்ருதிகளான ஆத்மாக்களைத் தமது சொத்தாகவுடையவர்.

86 **ஸுரேச:** அமரர்கள் தலைவர்.

87 **சரணம்:** தம்மை யடைவதற்குத் தாமே உபாய மாக இருப்பவர்.

88 **சர்ம** பேறும் தாமேயாயிருப்பவர்.

89 **விச்வரேதா:** உலகங்கட்கெல்லாம் மூலகாரண மாய் இருப்பவர்.

90 **ப்ரஜாபவ:** எல்லாப் பிரஜைகளும் தாம் தந்த ஸாதனங்களைக்கொண்டே தம்மைச் சேருமாறு அவைகளுக்கு இடமாயிருப்பவர்.

91 **அஹ:** அநாதிமாயையினுல் உறங்கி யெழுந்த வனுக்கு முதன்முதலாகத் தம் ஸ்வரூபத்தைக் காண்பிப்பதனுல் பகல் போன்றவர்.

92 **ஸம்வத்ஸர:** மேற்கூறிய அதிகாரிகளின் அறி விலே சேர்ந்து வஸிப்பவர்.

93 **வ்யாள:** அன்பர்களை அன்புடன் ஏற்றுக்கொள் பவர்.

94 **ப்ரத்யய:** அன்பர்களுக்குத் தம்மிடத்தில் நம் பிக்கை யுண்டாக்குமவர்.

95 **ஸர்வதர்சக:** அன்பர்கள் காலக்ரமத்தில் தம் மிடத்துள்ளதெல்லாம் காணும்படி செய்பவர்.

96 **அஜ:** அன்பர்கள் தம்மையடைவதற்கு இடை யூருனவற்றையெல்லாம் தாமே விலக்குமவர்.

97 **ஸர்வேச்வர:** எல்லா அன்பர்களிடத்திலும் தாமே சென்று சேர்பவர்.

98 **ஸித்த:** இனி உபாயங்களைக்கொண்டு தேட வேண்டாமே நிதிபோல் முன்னமே அமைந் திருப்பவர்.

99 **ஸித்தி:** உபாயங்களைக்கொண்டு தேடப்படும் பலனுகவுமிருப்பவர்.

100 **ஸர்வாதி:** ஸகல பலன்களுக்கும் ஆதிகாரண பூதர்.

ஸஹஸ்ரநாமத்தில் முதல் நூறு முற்றிற்று.

---

## இரண்டாவது நூறு

101 **அச்யுத:** அன்பர்களைவிட்டு விலகாதவர்.

102 **வ்ருஷாகபி:** தருமமே வடிவெடுத்ததான சிறந்த வராஹாவதாரம் செய்தவர்.

103 **அமேயாத்மா** அன்பர்கட்கு அநுக்ரஹம் செய் யுந்திறத்தில் அளவிடமுடியாதவர்.

104 **ஸர்வயோகவிநிஸ்ஸ்ருத:** பலவகையுபாயங் களினுலும் எளிதில் க்ரஹிக்கவும் அடையவும் கூடியவர்.

105 **வஸு:** அன்பர்களிடத்தில் அன்புடன் வஸிப் பவர்.

106 **வஸுமநா:** அன்பர்களை நிதியாக நினைப்பவர்.

107 **ஸத்ய:** அன்பர்களின் விருப்பங்களை நிறை வேற்றுபவர்.

108 **ஸமாத்மா** தன்னைப் பற்றினவர்களிடத்து ஏற்றத் தாழ்வு பாராமல் அனைவரையும் ஒரு நிகராகக் கருதுபவர்.

109 **ஸம்மித:** அன்பர்களுக்கு அடங்கியிருப்பவர்— பக்த விதேயர்.

110 **ஸம:** அன்று வந்து சேர்ந்த பக்தர்களையும் நெடுநாள் பழகின பக்தர்களைப்போலப் பார்ப் பவர்.

111 **அமோக:** தம்மைக் காண்பதோ துதிப்பதோ எதுவும் பழுதுபடமாட்டாதவர்.

112 **புண்டரீகாக்ஷ:** புண்டரீகமெனப்படும் திருநாட் டிலுள்ளவர்களுக்குக் கண்போன்றவர்.

113 **வ்ருஷகர்மா** தாபத்ரயத்தை ஆற்றுந் தன்மை யதான குளிர்ந்த செய்கையையுடையவர்.

114 **வ்ருஷாக்ருதி:** அன்பர்களின் தாபங்களையகற்றி அமுதம் பொழிவது போலக் குளிர்ந்திருக்கும் திவ்யரூபமுள்ளவர்.

115 **ருத்ர:** அன்பர்களை ஆனந்தக் கண்ணீர் பெருக்கி அழச்செய்பவர்.

116 **பஹுசிரா:** பல தலைகளையுடைய ஆதிசேஷனாகவு மிருப்பவர்.

117 **பப்ரு:** ஆதிசேஷ ரூபியாயிருந்து உலகங்களைத் தாங்குபவர்.

118 **விச்வயோநி:** அடைந்தவர்களெல்லாரையும் தம் மோடொன்றாகக் கொள்பவர்.

119 **சுசிச்ரவா:** அடியார்களின் இன்சொற்களையும் ஆர்த்த நாதங்களையும் செவிமடுத்துக் கேட்பவர்.

120 **அம்ருத:** ஆராவமுதாக இருப்பவர்.

121 **சாச்வதஸ்தாணு:** என்றும் அழிவில்லாமலும் பக்தர்களிடத்தில் நிலைத்துமிருப்பவர்.

122 **வராரோஹ:** தம்மையடைந்தவர் மறுபடி திரும்பி வருதலில்லாமையால் தம்மிடம் ஏறுவது [சேர்வது] எல்லாவற்றிலும் சிறந்ததாக இருப்பவர்.

123 **மஹாதபா:** அளவிடமுடியாத ஞானமுள்ளவர்.

124 **ஸர்வக:** ஸம்ஹரிக்கப்பட்டவற்றை யெல்லாம் தாமடைந்து வஹிப்பவர்.

125 **ஸர்வவித்:** ஸம்ஹரிக்கப்பட்டவற்றை யெல்லாம் மீண்டும் படைத்துக் காரியங்களான பிரபஞ்சங்களனைத்தையும் அடைபவர்.

126 **பாநு:** எல்லாவற்றையும் படைத்தும் தாம் விகாரமின்றிக்கே விளங்குபவர்.

127 **விஷ்வக்ஸேந:** எங்குமுள்ள ஜனங்களும் தம்மை ரக்ஷகராகக்கொண்டு ஜீவிக்கும்படிசெய்பவர்.

128 **ஜநார்தந:** தாம்செய்யும் ரக்ஷணத்திற்கு இடையூறு செய்யுமவர்களை உதவி தேடாமல் தொலைப்பவர்.

129 **வேத:** சாஸ்த்ரப்ரதானஞ் செய்பவர்.

130 **வேதவித்** வேதப் பொருள்களை உள்ளபடி உணருபவர்.

131 **அவ்யங்க:** வேதங்களின் அங்கங்கள் ஆறும் தம்மிடத்துக் குறைவின்றி நிரம்பியிருக்கப் பெற்றவர்.

132 **வேதாங்க:** தம்மையறியும் விஷயத்தில் வேதங்களைக் கருவியாகஉடையவர்—வேத வேத்யர்.

133 **வேதவித்:** வைதிக தர்மங்களை அனுஷ்டிக்கும்படி செய்து அதைத் தமக்கு ஆராதனமாகப் பெற்றுக் கொள்பவர்.

134 **கவி:** எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிப்பவர்.

135 **லோகாத்யக்ஷ:** தர்மப்ராணர்களான மஹான்களை நன்கு பார்ப்பவர்.

136 **ஸுராத்யக்ஷ:** அப்படிப்பட்ட தர்மப்ராணர்களால் ஆராதிக்கப்படும் தேவர்களை ஸாக்ஷாத்தாக அறிபவர். [அவர்களைத் தாமே ஏற்படுத்தியவரென்கை.]

137 **தர்மாத்யக்ஷ:** ஸகல கருமங்களுக்கு முரிய பலன்களைப் பெறுவிக்க வல்லவர்.

138 **க்ருதாக்ருத:** ஐச்வர்யம் முதலிய அநித்ய பலன்களைத் தரும் ப்ரவ்ருத்தி தர்மமாகவும் சாச்வதமான மோக்ஷ பலனைத்தரும் நிவ்ருத்தி தர்மமாகவுமிருப்பவர்.

140 **சதுர்வ்யூஹ :** மேற்சொன்ன நான்கு மூர்த்தி களில் ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி, தூர்யம் என்னும் நான்கு அவஸ்தைகள் பொருந்தியவர்.

141 **சதுர்தம்ஷ்ட்ர :** வ்யூஹங்களுக்கு ஆதாரமான பரவாஸு தேவரூபத்தில் நான்கு கோரப்பற்களை யுடையவர். (இது மஹாபுருஷ லக்ஷணம்)

142 **சதுர்புஜ :** பரவாஸு தேவமூர்த்தியில் நான்கு புஜங்களையுடையவர்.

143 **ப்ராஜிஷ்ணு :** கீழ்ச்சொன்ன பரரூபத்தை யுபாஸிப்பவர்களுக்குப் புலப்படுந்தன்மை யுள்ளவர்.

144 **போஜநம்** பக்தர்களுக்கு உணவுபோல் இனி தாக அநுபவிக்கக் கூடியவர்.

145 **போக்தா** பக்தர்கள் அன்போடு நிவேதனம் செய்யுமவற்றை விரும்பி ஏற்றுக்கொள்ளு மவர்.

146 **ஸஹிஷ்ணு :** குற்றங்களைப் பொறுக்கும் க்ஷமா குணமுடையவர்.

147 **ஜகதாதிஜ:** ஜகத்துக்கு அதிகரண பூதர்களாகிய மும்மூர்த்திகளுள் ஒருவராகத் தோன்றியவர்.

148 **அநக :** அவதாரங்களில் பாபலேபமில்லாதவர்.

149 **விஜய :** பிரமன் சிவனென்னுமிரண்டு மூர்த்தி களும் தத்தம் காரியங்களில் வெற்றி பெறும் படி செய்யவல்லவர்.

150 **ஜேதா.** அவ்விருவரையும் அடிக்கியாள்பவர்.

151 **விச்வயோநி:** அவ்விருவரையுங்கொண்டு நடத்தப்படும் கார்ய ப்ரபஞ்சம் முழுவதுக்கும் காரணமாயிருப்பவர்.

152 **புநர்வஸு:** அவ்விருவர் பக்கலிலும் அந்தர்யாமியாக வஸிப்பவர்.

153 **உபேந்த்ர:** இந்திரனுக்கு இளையவராக ஓரவதாரம் செய்தவர்.

154 **வாமந:** இந்திரனுக்காக்க வாமநாவதாரஞ் செய்தவர்.

155 **ப்ராம்சு:** உடனே த்ரிவிக்ரமாவதாரஞ் செய்து எங்கும் பரந்தவர்.

156 **அமோக:** இந்திரனுக்குப் போலவே மகாபலிக்கும் பழுதுபடாத சிறந்த அநுக்ரஹத்தைச் செய்தவர்.

157 **சுசி:** தாம் செய்யும் மஹோபகாரங்களுக்குக் கைம்மாறு கருதாமையாகிற தூய்மை வாய்ந்தவர்.

158 **ஊர்ஜித:** விரோதிகளை வலியடக்கத்தக்க வலிமையுடையவர்.

159 **அதீந்த்ர:** இந்திரனுக்கு இளையவராகத்தோன்றியிருந்தும் அதிமாநுஷ சேஷ்டிதங்களினால் இந்திரனுக்கு மேற்பட்டவர்.

160 **ஸங்க்ரஹ:** பக்தர்களாலெளிதில் க்ரஹிக்கப்படுமவர்.

161 **ஸர்க:** தம்மைத்தாமே ஆக்கியளிப்பவர்.

162 **த்ருதாத்மா** ஆத்மாக்களை உஜ்ஜீவிக்கச் செய்பவர்.

163 **நியம:** பக்த த்ரோஹிகளை அடக்குபவர்.

164 **யம:** அந்தர்யாமியாயிருந்து எல்லாவற்றையும் நடத்துமவர்.

165 **வேத்ய:** அவதாரங்களில் தம் மஹிமையை வெளிப்படுத்தி யாவருமறிய நிற்பவர்.

166 **வைத்ய:** தம்மைச் சிந்திப்பவர்கட்குப் பிறப் பிறப்பு முதலியவற்றைப் போக்கும் வகையை யறிந்தவர்.

167 **ஸதாயோகீ** மேற்சொன்ன பேருதவியில் எப்போதும் ஊக்கமுடையவர்.

168 **வீரஹா** குதர்க்கங்களினால் பரமாத்மஜ்ஞானத்தைக் கெடுக்கும் துர்வாதிகளை யொழிப்பவர்.

169 **மாதவ:** 'மா' எனப்படும் பரமாத்மஞானத்தை யளிப்பவர்.

170 **மது:** "உளங்கனிந்திருக்குமடியவர் தங்கள் உள்ளத்தூறிய தேனை" என்றபடி பக்தர்களுக்குத் தேன் போன்று தித்திப்பவர்.

171 **அதீந்த்ரிய:** புலன்களுக்கு எட்டாதவர்.

172 **மஹாமாய:** தம்மைச் சரணமடையாதவர்களுக்குத் திரைபோன்ற மாயையைக் காட்டுபவர்.

173 **மஹோத்ஸாஹ:** ஆச்ரிதரக்ஷணத்தில் மிகுந்த ஊக்கமுடையவர்.

174 **மஹாபல:** அஸஹாய சூரத்தன்மை வாய்ந்தவர்.

175 **மஹாபுத்தி:** ஏககாலத்தில் எதையும் அறிய வல்லவர்.

176 **மஹாவீர்ய:** எதற்கும் விகாரப்படாதிருப்பவர்.

177 **மஹாசக்தி:** சிறந்த சக்தி வாய்ந்தவர்.

178 **மஹாத்யுதி:** சிறந்த தேசு பொலிந்தவர்.

179 **அநிர்தேச்யவபு:** உவமை சொல்லப்பொருந்த திவ்யமங்கள விக்ரஹமுடையவர்.

180 **ஸ்ரீமாந்** அந்தத் திருமேனிக்குத் தகுந்த திவ்யாபரண சோபையுள்ளவர்.

181 **அமேயாத்மா** அளவிடக் கூடாத தன்மையுள்ளவர்.

182 **மஹாத்ரித்ருத்** கடல்கடைந்தபோது மந்தரமலையைத் தாங்கியிருந்தவர். *மஹாத்ரித்ருக்* என்றும் பாடமுண்டு.

183 **மஹேஷ்வாஸ:** அவதாரங்களில் அற்புதமாக அம்புகளை எய்தவர்.

184 **மஹீபர்த்தா** ஆதி கூர்மரூபியாகப் பூமியை எப்போதும் தாங்கிக் கொண்டிருப்பவர்.

185 **ஸ்ரீநிவாஸ:** *அலர்மேல்மங்கை யுறை மார்பன்.

186 **ஸதாம்கதி:** அந்த லக்ஷ்மீ ஸம்பந்தத்தினுல் ஸாதுகளுக்குத் தஞ்சமா யிருப்பவர்.

187 **அநிருத்த:** தட்டுத் தடங்கலற்ற திவ்ய சேஷ்டிதமுடையவர்.

188 **ஸுராநந்த:** தேவர்களைக் களிக்கச் செய்பவர்.

189 **கோவிந்த:** அந்தத் தேவர்கள் செய்யும் துதிமொழிகளைப் பெறுகின்றவர். [கோ—வாக்கு.]

190 **கோவிதாம்பதி:** வேதவாக்குகளையறிந்த வைதிகர்களைக் காப்பாற்றுமவர்.

191 **மரீசி:** தமது மாசற்ற திவ்ய ரூபத்தைக் காட்டுமவர்.

192 **தமந:** திவ்ய தேஹவொளியினுல் ஸம்ஸார தாபங்களை யடக்குமவர்.

193 **ஹம்ஸ:** ஹம்ஸாவதாரம் செய்தருளியவர்.

194 **ஸுபர்ண:** மேற்கூறிய ஹம்ஸாவதாரத்தில் அழகிய சிறகுகளை யுடையவர்.

195 **புஜகோத்தம:** அரவணைமேற் பள்ளிகொண்டு உத்தமராக விளங்குமவர்.

196 **ஹிரண்யநாப:** பொன் போல் விரும்பத்தக்க திருநாபியை யுடையவர்.

197 ஸுதபா : திவ்யஜ்ஞானஸ்வரூபி.

198 பத்மநாப: திருநாபியில் தாமரையை யுடையவர்.

199 ப்ரஜாபதி : அந்தத் திருநாபியில் பிறந்த பிரமன் முதலிய பிரஜைகளுக்குத் தலைவர்.

200 அம்ருத்யு : ம்ருத்யுவைத் தடுப்பவர்.

ஸஹஸ்ரநாமத்தில் இரண்டாவது நூறு முற்றிற்று.

---

## மூன்றாவது நூறு

201 ஸர்வத்ருக் எல்லாவற்றையும் நன்றாகப் பார்த்தறிபவர்.

202 ஸிம்ஹ : நரசிங்க வுருக்கொண்டவர்.

203 ஸந்தாதா அப்படி நரஸிம்ஹாவதாரமெடுத்த போது ப்ரஹ்லாதன் முதலிய பக்தர்களைத் தம்மோடு சேர்த்துக்கொண்டவர்.

204 ஸந்திமாந் அன்பர்களுக்கு தமது சேர்க்கை எக்காலமும் நீங்காதிருக்கச் செய்பவர்.

205 ஸ்திர : அன்பர்களிடத்தில் தாம் வைத்த அன்பு அவர்களது குற்றங்களினாலும் மாற்றவொண்ணாதபடி நிலைத்திருக்கப்பெற்றவர்.

206 அஜ : தூணில் நின்று தோன்றியவராதலால் மற்றவர்களைப்போல் பிறவாதவர்.

207 துர்மர்ஷண : வைரிகளால் தாங்கமுடியாதவர்.

208 **சாஸ்தா** இரணியன் முதலான விரோதிகளை நன்ருக சிக்ஷித்தவர்.

209 **விச்ருதாத்மா** செவிச்கினிய (நரஸிம்ஹ) அவதார சரித்திரமுடையவர்.

210 **ஸுராரிஹா:** அமரர்களுக்குப் பகைவனுன இரணியனைப் பிளந்தவர்.

211 **குருர் குருதம:** (குருதம: குரு:) பிரமன் முதலானவர்களுக்கும் எல்லாக் கல்விகளையும் உபதேசித்ததனுல் ஆசாரியர்கட்கும் மேலான ஆசார்யர்.

212 **தாம:** அனைத்துக்கும் இருப்பிடமாகவுள்ளவர்.

213 **ஸத்ய:** பிரளயகாலத்தில் தம்மையடுத்த மநு முதலான ஸத்துக்களுக்கு உதவி புரிந்தவர்.

214 **ஸத்ய பராக்ரம:** அந்த மநுமுதலான ஸத்துக்கள் இடத்தில் தம்முடைய சக்தி பழுதுபடாமே உண்மையாகப் பெற்றவர்.

215 **நிமிஷ:** ஆச்ரித விரோதிகள் விஷயத்தில் கண்ணைத் திறந்து கடாக்ஷம் செலுத்தாதவர்.

216 **அநிமிஷ:** ஸத்துக்களைக் கடாக்ஷிக்கும் விஷயத்தில் இமை கொட்டாதிருப்பவர்.

217 **ஸ்ரக்வீ** வைஜயந்தி என்னும் வனமாலையை எக்காலமும் அணிந்திருப்பவர்.

218 **வாசஸ்பதி:** வேதப்பொருளை வெளியிட்டு மஹாவாக்மியெனப் பேர் பெற்றவர்.

219 **உதாரதீ:** மிகச் சிறந்த ஞானமுள்ளவர்.

220 **அக்ரணீ:** அன்பர்களை உயர்கதிக்குக் கொண்டு போமவர்.

221 **க்ராமணீ:** நித்ய முக்தர்களின் கூட்டத்திற்கு நியாமகராயிருப்பவர்.

222 **ஸ்ரீமாந்** தமது பரமேச்வர மஹிமைக்கு ஒரு போதும் குறைவில்லாதவர்.

223 **ந்யாய:** நீதிக்கு ஒத்ததையே செய்பவர்.

224 **நேதா** பக்தர்களைக் கரையேற்றுமவர்.

225 **ஸமீரண:** சிறந்த திவ்ய சேஷ்டிதங்களையுடையவர்.

226 **ஸஹஸ்ரமூர்த்தா** அளவிறந்த தலைகளை யுடையவர்.

227 **விச்வாத்மா** தமது ஞானசக்திகளினால் உலகம் எல்லாவற்றையும் வியாபித்திருப்பவர்.

228 **ஸஹஸ்ராக்ஷ:** அளவிறந்த கண்களையுடையவர்.

229 **ஸஹஸ்ரபாத்** அளவிறந்த கால்களையுடையவர்.

230 **ஆவர்த்தந:** ஸம்ஸார சக்ரத்தை ஓயாது சுழற்றிக்கொண்டே யிருப்பவர்.

231 **நிவ்ருத்தாத்மா** ப்ராக்ருத ஸ்வபாவங்களைக் கடந்ததான ஸ்வபாவமுடையவர்.

232 **ஸம்வ்ருத:** அறிவிலிகளுக்கு விளங்காமல் மறைந்திருப்பவர்.

233 **ஸம்ப்ரமர்த்தந:** தம்மை யடுத்தவர்களுக்கு மாயையைத் தொலைத்தருள்பவர்.

234 **அஹஸ்ஸம்வர்த்தக:** பகல் முதலிய பிரிவுகளோடு கூடிய காலசக்கரத்தை யுருட்டுபவர்.

235 **வஹ்நி:** யாவரையும் தாங்குபவர்.

236 **அநில:** யாவரும் உயிர்க்கும்படி செய்பவர்.

237 **தரணீதர:** பூமியைத் தாங்குபவர்.

238 **ஸுப்ரஸாத:** அன்பர்களுக்கு மிகுந்த அருள் செய்பவர்.

239 **ப்ரஸந்நாத்மா** விருப்பு வெறுப்பு முதலிய கலக்கங்களின்றி எப்போதும் தெளிவு பெற்ற சிந்தையர்.

240 **விச்வஸ்ருக்(ட்)** உலகங்களைப் படைத்தவர்.

241 **விச்வபுக்விபு:** உலகங்களை வியாபித்துக் காப்பவர்.

242 **ஸத்கர்த்தா:** ஸத்துக்களை வெகுமானிப்பவர்.

243 **ஸத்க்ருத:** ஸாதுக்களால் ஆராதிக்கப் படுபவர்.

244 **ஸாது:** தூது போதல் தேரோட்டுதல் முதலாக அன்பர்கள் விரும்பினவற்றை யெல்லாம் செய்து முடிப்பவர்.

245 **ஜஹ்நு:** பக்தியற்றவர்களுக்குத் தம்மை மறைத்திடுபவர்.

246 **நாராயண :** அழியாத நித்ய வஸ்துக்களின் திரளுக்கு ஆதாரமாயிருப்பவர்.

247 **நர :** தம்மைச் சேர்ந்த சேதநாசேதந விபூதிகள் யாவும் அழியாமலிருக்கப் பெற்றவர்.

248 **அஸங்க்யேய :** எண்ணிறந்த சேதநாசேதநங்களாகிய விபூதிகளையுடையவர்.

249 **அப்ரமேயாத்மா** எண்ணிறந்த பதார்த்தங்களெல்லாவற்றிலும் உள்ளும் புறமும் வியாபித்திருப்பவர்.

250 **விசிஷ்ட :** தனிச்சிறப்புப் பொருந்தியவர்.

251 **சிஷ்டக்ருத்** தம்மைச் சார்ந்தவர்களை நற்குண நற்செய்கைகளுள்ளவர்களாகச் செய்பவர்.

252 **சுசி :** தமக்குத்தாமே தூய்மை பெற்றவர்.

253 **ஸித்தார்த்த :** எல்லாம் ஸ்வயமாகவே ஸித்தித்திருக்கப் பெற்றவர்.

254 **ஸித்தஸங்கல்ப :** நினைத்தவை யெல்லாம் நினைத்த மாத்திரத்தில் நிறைவேறப் பெற்றிருப்பவர்.

255 **ஸித்தித :** ஸித்தியை விரும்புகின்றவர்களுக்கு அதை யளிப்பவர்.

256 **ஸித்திஸாதந :** தம்மை உபாஸிப்பதும் பலன் போல் இன்பமாகத் தோன்றும்படி யிருப்பவர்.

257 **வ்ருஷாஹீ** தம்மை முதலில் அணுகும் தினமே எல்லா நன்மைகளுக்கும் வித்திடும் நாள் போல இருப்பதனால் அந்த தினம் மிகச் சிறப்பாக இருக்கப் பெற்றவர்.

258 **வ்ருஷப:** ஸம்ஸாரத் தீயினால் கதுவப்பட்டு வந்து பணிந்தவர்மீது தமது கடாக்ஷ அம்ருத வர்ஷதாரையைப் பொழியுமவர்.

259 **விஷ்ணு:** அப்படி கடாக்ஷிக்கப் பெற்றவர்களை என்றும் விட்டுப் பிரியா திருப்பவர்.

260 **வ்ருஷபர்வா** தம்மிடம் வந்து சேருவதற்கு வர்ணாச்ரம தர்மங்களையே படிகளாக அமைத்திருப்பவர்.

261 **வ்ருஷோதர:** தருமமே வடிவெடுத்த திரு வயிற்றை யுடையவர். பரம வைதிகர்கள் நிவேதனம் செய்யும் உணவுகளை உட்கொள்வதனாலும், அனைவரையும் ஒரு காலவிசேஷத்தில் திருவயிற்றிலே வைத்துக் காப்பதனாலும்.

262 **வர்த்தந:** ஆராதிப்பவர்களை மேன்மேலும் வளர்ப்பவர்.

263 **வர்த்தமாந:** அன்பர்கள் வளர்வது கண்டு தாமும் மகிழ்ந்து வளர்பவர்.

264 **விவிக்த:** தமக்கே சிறப்பாயுள்ள சரித்திரங்களை யுடையவர்.

265 **ச்ருதிஸாகர:** நதிகளுக்குக் கடல்போல வேதங்களுக்கெல்லாம் புகலிடமாயிருப்பவர்.

266 ஸுபுஜ: சரணுகதர்களின் பாரங்களை நன்கு வஹிக்கவல்ல தோள்வலி யுடையவர்.

267 துர்த்தர: மனவலிமை யற்றவர்களினுல் ஹ்ருதய கோசத்தில் தாங்க முடியாதவர்.

268 வாக்மீ விபவாவதாரங்களில் செவிக்கினிய செஞ்சொற்களைச் சொரியுமவர்.

269 மஹேந்த்ர: பரமேச்வரத் தன்மை வாய்ந்தவர்.

270 வஸுத: பொருளை விரும்புமவர்கட்கு அதை யளிப்பவர்.

271 வஸு: வேருரு பொருளை விரும்பாதவர்கட்குத் தாமே பொருளாகவுமிருப்பவர். *சேலேய் கண்ணியரும் **பெருஞ் செல்வமும்** நன்மக்களும்... அவரே யினியாவாரே * என்கிறபடியே.

272 நைகரூப: விச்வரூபமாகப் பலபல வுருவங்களைக் கொள்பவர்.

173 ப்ருஹத்ரூப: அங்ஙனே கொள்ளும் உருவங்களில் ஒவ்வொன்றும் எல்லாத் திசைகளையும் மேலுலகத்தையும் இடைவெளியையும் வியாபிக்கும்படி பெரியவராயிருப்பவர்.

274 சிபிவிஷ்ட: கிரணங்களுள் பிரவேசித்து வியாபித்திருப்பவர்.

275 ப்ரகாசந: தமது திவ்ய ரூபத்தைக் காணக்கருதும் பரம பக்தர்களுக்கு விளங்கக் காட்டுபவர்.

276 **ஓஜஸ்தேஜோத்யுதிதர:** பலம், பராக்ரமம், ஒளி இவற்றையுடையவர்.

277 **ப்ரகாசாத்மா:** அறிவிலிகளுக்குங்கூட வெளிப் படையாகத் தெரியும் சிறந்த பிரபாவமுடையவர்.

278 **ப்ரதாபந:** பகைவரைத் தபிக்கச் செய்பவர்.

279 **ருத்த:** எப்போதும் ஸம்ருத்தியோடு கூடியிருப்பவர். (நிரம்பியிருப்பவர்.)

280 **ஸ்பஷ்டாக்ஷர:** தமது மஹிமையைத் தெளிவாக வெளிப்படுத்தும் வேதாக்ஷரங்களை வெளியிட்டவர்.

281 **மந்த்ர:** மனனம் செய்பவர்களை [தம்மைச் சிந்திப்பவர்களை]க் காப்பாற்றுகின்றவர்.

282 **சந்த்ராம்சு:** தம்மைச் சிந்திப்பவர்களுக்குக் களைப்பைத் தீர்த்துச் செழிப்பை விளைப்பதனால் சந்திரன் போன்ற வொளியுள்ளவர்.

283 **பாஸ்கரத்யுதி:** இரவியைக் கண்ட இருள் போலப் பகைவர் பாறிப் பறந்தோடும்படியான பராக்ரமுள்ளவர்.

284 **அம்ருதாம்சூத்பவ:** சந்திரனும் தமது மனத்திலிருந்து தோன்றப்பெற்றதனால் சந்திரனுக்குப் பிறப்பிடமாயிருப்பவர்.

285 **பாநு:** ஸூர்யன் முதலிய சுடர்ப் பொருள்களுக்கெல்லாம் தாமே ஒளியை யளிப்பவர்.

286 **சசபிந்து:** கெட்டவழியிற் செல்பவர்களை யழிப்பவர்.

287 **ஸுரேச்வர:** நன்னெறியில் நடப்பவர்களை உயர்கதிக்குச் செலுத்துபவர்.

288 **ஔஷதம்** பிறவியென்னும் நோய்க்கு மருந்து.

289 **ஜகதஸ்ஸேது:** உலகுக்குப் புண்ய பாப பலன்களை மாறுமல் கொடுப்பவர்.

290 **ஸத்யதர்ம பராக்ரம:** தமது கல்யாண குணங்களும் பராக்ரமங்களும் பழுதுபடாதபடி உலகத்தை உய்விப்பவர்.

291 **பூதபவ்ய பவந்நாத:** முக் காலங்களிலு முள்ளவற்றிற்கும் கடவர்.

292 **பவந:** காற்றுக்கும் தம் சக்தியை யூட்டியிருப்பவர்.

293 **பாவந:** கங்கை முதலிய பரிசுத்த வஸ்துக்களுக்குப் பரிசுத்தியை யளித்தவர்.

294 **அநல:** அடியார்களுக்கு எவ்வளவோ நன்மைகளை யளித்தும் போதுமென்கிற எண்ணமில்லாதவர். "உன்னடியார்க்கு என் செய்வனென்றே யிருத்தி நீ" என்றார் நம்மாழ்வார்.

295 **காமஹா** தமது திருக்குணங்களில் ஈடுபட்டவர்களுக்கு மற்ற விஷயங்களில் விருப்பத்தைக் கெடுப்பவர்.

296 **காமக்ருத்** ஞானிகளுக்குத் தம்மிடத்தில் விருப்பத்தைத் தாமே விளைப்பவர்.

297 **காந்த:** வடிவழகு முதலியவற்ருல் யாவராலும் விரும்பப்படுமவர்.

298 **காம:** மன்மதனுக்கு உலகத்தை மயங்கச் செய்யுந் தன்மையைத் தாமே அளித்தவர்.

299 **காமப்ரத:** அவரவர் விரும்புமவற்றை யளிப்பவர்.

300 **ப்ரபு:** எல்லாருடைய மனத்தையும் கவரவல்லவர்.

ஸஹஸ்ரநாமத்தில் மூன்ருவது நூறு முற்றிற்று.

---

## நான்காவது நூறு

301 **யுகாதிக்ருத்** பிரளயமானபோது திரும்பவும் படைத்தல் செய்பவர்.

302 **யுகாவர்த்த:** நான்கு யுகங்களையும் அடைவே திரும்பச் செய்பவர்.

303 **நைகமாய:** ஆலமரத்திலிலைமேல் ஒரு பாலகனுய்ப் பள்ளிகொள்ளுதல் முதலான பலவகை ஆச்சரியச் செயல்களை யுடையவர்.

304 **மஹாசந:** *ஞாலமேழு முண்பதாகிற பெருந் தீனியை யுடையவர்.

305 **அத்ருச்ய :** மார்க்கண்டேயர் முதலானவர்களுக்கும் உண்மை புலப்படாத சரிதைகளை யுடையவர்.

306 **வ்யக்தரூப :** தமது கருணையினால் தெளிவாகப் புலப்படுத்தும் திவ்ய மங்கள விக்ரஹமுடையவர்.

307 **ஸஹஸ்ரஜித் :** ஆயிரம் யுகங்களாக எண்ணப் படும் பிரளயகாலத்தையோக நித்திரையிலிருந்தே ஜயிப்பவர்.

308 **அநந்தஜித்** தமது மகிமையின் முடிவை யாவரும் காணக்கூடாமலிருப்பவர்.

309 **இஷ்டோ விசிஷ்ட :** [அவிசிஷ்ட : இஷ்ட :] பிரளய காலத்தில் தம்திருவயிற்றில் கொள்ளப்பட்ட யாவரும் வாசியின்றித் தாய்போல விரும்பும்படி யிருப்பவர்.

310 **சிஷ்டேஷ்ட :** மார்க்கண்டேயர் முதலிய மேன்மக்களால் பரம புருஷார்த்த மென்று விரும்பப்படுபவர்.

311 **சிகண்டீ** யாராலும் வெல்லவொண்ணாத அளவு கடந்த ஐச்வர்யமாகிய சிறந்த மஹிமையையே சிறந்த சிரோ பூஷணமாகவுடையவர்.

312 **நஹுஷ :** தமது மாயையினால் ஜீவர்களைக் கட்டுபவர்.

313 **வ்ருஷ:** அன்பர்களை அமுதம்போன்ற திருமேனியொளியினாலும் இன்சொற்களாலும் நனைப்பவர்.

314 **க்ரோதஹா** (பரசுராமாவதாரஞ்செய்து) கோக்குல மன்னரை மூவெழுகால் ஒரு கூர் மழுவால் போக்கிக் கோபம் தணியப் பெற்றவர்.

315 **க்ரோதக்ருத்** க்ஷத்ரியர்களைக் கொல்ல வேண்டிக் கோபஞ் செய்தவர்.

316 **கர்த்தா** தமது கோபத்திற்கு இலக்கான கார்த்தவீரியனைத் துணித்தவர்.

317 **விச்வபாஹு:** விரோதிகளைத் தொலைப்பதனால் உலகங்கட்கு க்ஷேமகரமான திருக்கைகளையுடையவர்.

318 **மஹீதர:** பூமிக்குச் சுமையான துஷ்டர்களைத் தொலைத்துப் பூமியை நிலைபெறுத்துபவர்.

319 **அச்யுத:** தம்முடைய நிலைமை தவறுமலிருப்பவர்.

320 **ப்ரதித:** உலகம் நிறைந்த புகழாளர்.

321 **ப்ராண:** ஜீவராசிகளுக்கெல்லாம் உயிராக இருப்பவர்.

322 **ப்ராணத:** (கூர்மாவதாரத்தில்) தேவர்களுக்குக் கடல் கடைவதற்குரிய தேஹ வலிமையைக் கொடுப்பவர்.

323 **வாஸவாநுஜ:** அமுதம் விரும்பின இந்திரனுக்கு அதையளிக்கவேண்டி அவனுக்குப் பின் பிறந்தவர்.

324 **அபாம்நிதி :** கடல் கடையப்படும்போது அதற்கு ஆதாரமாயிருந்து அதனைத் தாங்கினவர்.

325 **அதிஷ்டாநம்** கடல் கடைந்தபோது மந்திரமலை நிலைநிற்கும்படி அதைத் தாங்கினவர்.

326 **அப்ரமத்த :** அடியார்களைக் காப்பதில் ஊக்கம் தவறாதிருப்பவர்.

327 **ப்ரதிஷ்டித :** தமக்கு வேறு ஆதாரம் வேண்டாதபடி தமது மஹிமையிலேயே தாம் நிலை நிற்பவர்.

328 **ஸ்கந்த :** அஸுர ராக்ஷஸர்களை யழிப்பவர்.

329 **ஸ்கந்ததர :** "ஸேனாபதிகளுள் நான் ஸ்கந்தன்" என்று தாமே கீதையிற் சொன்னபடியே தேவ ஸேனாபதியான கந்தனையும் தாங்குபவர்.

330 **துர்ய :** உலகமாகிற பெருஞ்சுமையைத் தாங்குபவர்.

331 **வரத :** லோக நிர்வாஹபாரத்தை வஹிக்கும் தேவர்களுக்கும் அந்த வல்லமையுண்டாம்படி வரம் அளிப்பவர்.

332 **வாயு வாஹந :** உலகத்திற்குப் பிராணனான காற்றையும் நடத்துபவர்.

333 **வாஸுதேவ :** எங்கும் உறைபவராக இருந்து விளையாட்டாகவே ஸகல ரக்ஷணங்களையும் செய்பவர்.

334 **ப்ருஹத்பாநு:** விரிவாக எப்பொழுதும் விளங்கும் பிரகாச முடையவர்.

335 **ஆதிதேவ:** உலகங்கட்கு மூலகாரணமாக இருந்து ஜகத்ஸ்ருஷ்டி முதலானவற்ருல் மகிழ்ந்திருப்பவர்.

336 **புரந்தர:** அசுரர்களின் பட்டணங்களைப் பிளப்பவர்.

337 **அசோக:** துன்பங்களைப் போக்குபவர்.

338 **தாரண:** பயஸ்தானங்களைத் தாண்டுவிப்பவர்.

339 **தார:** ஸம்ஸாரக்கடலில் நின்றும் கரையேற்றுபவர்.

340 **சூர:** விரோதிகளை வெல்லுவதில் மிக வல்லமையுள்ளவர்.

341 **சௌரி:** சூரனென்னப்பட்ட வஸு தேவருக்குப் புதல்வரானவர்.

342 **ஜநேச்வர:** ஜனித்தவர்கள் யாவர்க்கும் ஈச்வரராய் இருப்பவர்.

343 **அநுகூல:** தமது பரத்துவத்தைப் பாராட்டாமல் அடியார்களனைவர்க்கும் அடிபணிய எளியவராய் இருப்பவர்.

344 **சதாவர்த்த:** தமது ஐச்வரிய அலைகள் சுழித்துச் சுழித்துப் பெருகும்படி யிருப்பவர்.

345 **பத்மீ:** லீலாரவிந்தத்தை எப்பொழுதும் கையில் கொண்டிருப்பவர்.

346 **பத்மநிபேக்ஷண:** தாமரைப்பூ மலர்ந்தாற் போன்ற திருக்கண்ணேக்க முடையவர்.

347 **பத்மநாப:** தாமரை போன்ற அல்லது தாமரை மலரைக் கொண்ட திருநாபியையுடைவர்.

348 **அரவிந்தாக்ஷ:** தாமரைப் பூப்போன்ற திருக் கண்களை யுடையவர்.

349 **பத்மகர்ப்ப:** உபாஸகர்களால் ஹ்ருதய கமலத் தில் நிறுத்தப்படுகிறவர்.

350 **சரீரப்ருத்** உபாஸகனுடைய ஹ்ருதய கமலத் தில் இருந்துகொண்டு தமக்கு உடலான அவ் வுபாஸனங்களைப் போஷிப்பவர்.

351 **மஹர்த்தி:** பக்தர்களின் யோக க்ஷேமங்களெல் லாவற்றையும் குறைவின்றி நடத்துபவர்.

352 **ருத்த:** அன்பர்களின் ஸம்ருத்தியினலேயே தாமும் ஸம்ருத்தி பெற்றிருப்பவர்.

353 **வ்ருத்தாத்மா** இவ்வளவு மஹிமைகளும் உள் ளங் கையில் அடங்கினற்போல் தோற்றும்படி பெரிதான ஸ்வரூப முடையவா.

354 **மஹாக்ஷ:** கருடனைச் சிறந்த வாகனமாகக் கொண்டவர்.

355 **க்ருடத்வஜ:** அந்தக் கருடனைக் கொடியாகவும் கொண்டவர்.

356 **அதுல:** * தன்னெப்பாரில்லப்பன் * என்றபடி எந்தவகையிலும் தம்மோடொத்திருப்பாரில் லாதவர்.

357 சரப: தாம் இட்ட வேலிகளை யழிப்பவர்கள் யாவரோ அவர்களைத் தொலைப்பவர்.

358 பீம: வாயு ஸூர்யன் முதலான தேவர்களும் தம்மிடத்தில் அஞ்சி நடக்கும்படியாக வுள்ள வர்.

359 ஸமயஜ்ஞ: பக்தர்கள் தம்மிடம் வந்து சேர வேண்டிய காலத்தை அறிந்திருப்பவர்.

360 ஹவிர்ஹரி: வேள்விகளில் அளிக்கப்படுகிற ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக் கொள்பவர்.

361 ஸர்வலக்ஷணலக்ஷண்ய: மஹா புருஷ லக்ஷணங் களெல்லாவற்றாலும் திருமாலென்று அறுதி யிடத் தக்கவர்.

362 லக்ஷ்மீவாந்: எப்பொழுதும் லக்ஷ்மியின் ஸம் பந்த முடையவர்.

363 ஸமிதிஞ்ஜய: ஜீவாத்மாக்கள் தம்மோடு விவா தப்படுமளவில் அந்த கலஹத்தில் வெற்றி பெறுமவர்.

364 விக்ஷர: அன்பர்களிடத்தில் நீங்காத அன்புடை யவர்.

365 ரோஹித: தாமரைப்பூவின் உட்புறம்போலச் சிவந்த நிறமுள்ளவர்.

366 மார்க: உபாஸகர்களினால் தேடப்படுகிறவர்.

367 ஹேது: பக்தர்களின் கோரிக்கைகள் கை கூடு வதற்குக் காரணமாயிருப்பவர்.

368 தமோதர : யசோதையின் தாம்பினால் கட்டுண்டிருந்த திருவயிற்றை யுடையவர்.

369 ஸஹ : அப்படிப்பட்ட கண்ணிநுண் சிறுத் தாம்பினால் கட்டுண்டிருந்ததை ஸஹித்திருந்தவர்.

370 மஹீதர : பூமிக்குச் சுமையான துஷ்டர்களைப் போக்கிப் பூமியை நிலை நிறுத்துபவர்.

371 மஹாபாக : அளவுகடந்த ஸௌபாக்யமுடையவர்.

372 வேகவாந் : மனுஷ்யக் குழந்தையாக விளையாடும் பருவத்திலும் தமது பரமேச்வர சக்தியின் வேகம் குறையாதவர்.

373 அமிதாசந : இந்திரனுக்கென்று ஆயர்களிட்ட அபரிமிதமான உணவுகளைத் தாம் உண்டவர்.

374 உத்பவ : தம்மைத் தியானம் செய்பவர்களுக்கு ஸம்ஸாரப் பற்று விலகும்படி செய்பவர்.

375 க்ஷோபண : கட்டுப்படுவதற்குரிய ஜீவராசிகளையும் அவற்றைக் கட்டுமதாகிய ப்ரக்ருதியையும் பிரளயத்திற்குப்பின் ஸ்ருஷ்டி காலத்தில் கலக்குகிறவர்; உற்பத்தியாகும்படி செய்பவர்.

376 தேவ : லீலா விபூதி நிர்வாஹமாகிற விளையாட்டை யுடையவர்.

377 ஸ்ரீ கர்ப்ப : ஸ்ரீ மஹாலக்ஷ்மியை எப்போதும் கர்ப்பம்போல் காப்பவர்.

378 பரமேச்வர: அந்த ஸ்ரீ மஹா லக்ஷ்மியின் நித்ய யோகத்தினுல் பரமேச்வர சக்தி பயன்பட்டிருப்பவர்.

379 கரணம் அடியார்கள் தம்மையடைவதற்குத் தாமே சிறந்த கருவியாயிருப்பவர்.

380 காரணம் இந்திரியங்களாகிய கருவிகளால் ஜீவர்களுக்கு எல்லா அறிவையும் உண்டுபண்ணுகிறவர்: இந்திரியங்களுக்கும் அதிஷ்டான தேவதையென்க.

381 கர்த்தா எந்த விஷயத்திலும் ஸ்வாதந்திரியம் வாய்ந்தவர்.

382 விகர்த்தா; பிறருடைய ஹர்ஷசோகங்களுக்குத் தகுதியாகத் தாமும் அவற்றை யடைந்து விகாரப்படுபவர்.

383 கஹந: அப்படிப்பட்ட மஹாகுணம் நெஞ்சால் நினைக்கவும் நிலமாகாதபடி யிருப்பவர்.

384 குஹ: உலகமனைத்தையும் ரக்ஷிப்பர்.

385 வ்யவஸாய: எல்லாம் தம்மிடத்தில் கட்டுப்பட்டிருக்கப் பெற்றவர்.

386 வ்யவஸ்தாந: ஸகல வ்யவஸ்தைகளையும் செய்தவர்.

387 ஸம்ஸ்தாந; எல்லாம் தம்மிடத்தில் முடிவு பெறும்படி யிருப்பவர்.

388 ஸ்தாநத: உயர்ந்த பதவிகளை விரும்புமவர்களுக்கு அவற்றைக் கொடுப்பவர்.

389 த்ருவ: த்ருவ மூர்த்தியாயிருப்பவர்.

390 பரர்த்தி: திருக்கல்யாண குணங்களின் பரிபூரண ஸம்ருத்தியை யுடையவர்.

391 பரமஸ்பஷ்ட: அவதாரங்களிலும் வ்யக்தமாகக் காணக்கூடிய மேன்மை வாய்ந்தவர்.

392 துஷ்ட: அன்பர்களைக் காக்க அவதரிக்கப் பெறுவதனல் மகிழ்ச்சி யடைபவர்.

393 புஷ்ட: ஸகல மஹா குணங்களினுலும் நிரம்பியிருப்பவர்.

394 சுபேக்ஷண: பரமபவித்ரமான கடாக்ஷ வீக்ஷணத்தை யுடையவர்.

395 ராம: தேஹ குணங்களாலும் ஆத்ம குணங்களாலும் இழுக்கப்பட்டு யாவரும் தம்மிடத்தில் உகப்பை யடையும்படி யிருப்பவர்.

396 விராம: பிறருடைய பெருமைகள் யாவும் தம்மிடத்தில் ஓய்ந்துபோகும்படி யிருப்பவர்.

397 விரத: [விரஜ: என்றும் பாடமுண் டென்பர்.] எந்த ஸுகத்திலும் ஆசையில்லாதிருப்பவர். [விரஜ: என்று பாடமானுல் விரஜோமார்க: என்று ஒரே பதமாகி ஒரே திருநாமமாகக் கடவது: குற்றமற்ற வழியைக் காட்டுபவர் என்க.]

398 மார்க: யோகிகளும் தேடும்படியாக இருப்பவர்.

399 நேய: தம்முடைய பக்தர்கள் தம்மை நியமிக்கும்படி அவர்களுக்கு அடங்கியிருப்பவர்.

400 நய: எல்லாவற்றையும் அடக்கி நடத்திக் கொண்டு போகிறவர்.

ஸஹஸ்ரநாமத்தில் நான்காவது நூறு முற்றிற்று.

---

## ஐந்தாவது நூறு

401 அநய: விரோதிகளால் அடக்கப்பட முடியாதவர்.

402 வீர: பகைவர்கள் அஞ்சி நடுங்கும்படி செய்பவர்.

403 சக்திமதாம் ச்ரேஷ்ட: சக்திவாய்ந்த தேவர்களுள்ளும் சிறந்தவர்.

404 தர்ம: ஸாக்ஷாத் தர்மஸ்வரூபியாகவுள்ளவர்.

405 தர்மவிதுத்தம: தருமமறிந்தவர்களுள் மிகச் சிறந்தவர்.

406 வைகுண்ட: பக்தர்கள் தம்மை யடைவதற்கு இடையூறுகளெல்லாவற்றையும் அகற்றி அவர்களைத் தம்மிடம் எளிதில் சேர்த்துக்கொள்கிறவர்.

407 புருஷ: யாவர்க்கும் தலைமையாயிருப்பவர். [புருஷோத்தமர்.]

408 ப்ராண : எல்லாவற்றையும் உயிர்ப்பிக்குமவர்.

409 ப்ராணத : உயிர்ப்பிச்சை யளிப்பவர்.

410 ப்ரணம : தமது திருக்குணங்களினால் சராசரங்களனைத்தும் தம்மை வணங்கும்படி யிருப்பவர். [ப்ரணவ:'] என்றும் பாடமுண்டு; மிகவும் துதிக்கப்படுபவர் என்றபடி.

411 ப்ருது : பெருங் கீர்த்தி வாய்ந்தவர்.

412 ஹிரண்ய கர்ப்ப : பொற் புதையல் போன்றவர்.

413 சத்ருக்ந : இந்திரியங்களாகிற பகையைத் தொலைப்பவர்.

414 வ்யாப்த : எல்லாரிடத்திலும் ஒரு நிகரான அன்பினால் நிரம்பியவர்.

415 வாயு : தம்மைச் சிந்திக்குமவர்கள் எங்கெங்கு உள்ளார்களோ, அவ்விடம் தேடிச்செல்பவர்.

416 அதோக்ஷஜ : கீழுலகிலும் தமது மகிமை சிறிதும் குன்றாமல் அவதரித்திருப்பவர்.

417 ரிது : (ருது) "அப்பொழுதைக்கப்பொழுதென்னாராமுதமே" என்றாற் போல எப்போதும் புதிது புதிதாகத் தோன்றி உகப்பிக்கவல்ல திருக்குணங்கள் ஒன்றுக்குமேலொன்று விசேஷமாக விருத்தியாகும்படி பக்தர்களின் உள்ளங்களில் சென்று கொண்டிருப்பவர்.

418 ஸுதர்சந : அழகிய திவ்யமங்கள விக்ரஹஸேவையை யுடையவர்.

419 **கால:** குணவிசேஷங்களினால் சராசரங்களனைத்தையும் தம்மிடத்தில் சேர்த்துக்கொள்பவர்.

420 **பரமேஷ்டீ** தமது உயர்ந்த ஸ்தானமாகிய ஸ்ரீ வைகுண்டத்திலிருப்பவர்.

421 **பரிக்ரஹ:** பக்தர்களைத் தமது திருவடி சேரும்படி பரிக்ரஹிப்பவர்.

422 **உக்ர:** † தர்மவிரோதிகள் விஷயத்தில் கொடியராயிருப்பவர்.

423 **ஸம்வத்ஸர:** ஸம்ஹாரத்துக் குரிய கருவிகளுடன் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு பாதாளலோகத்தில் ஆதிசேஷன்மேல் இருப்பவர்.

424 **தக்ஷ:** கொள்ளைக்காரர்களாகிய மிலேச்சர்களை வதஞ்செய்யவல்லவர்.

425 **விச்ராம:** பாபபலன்களை யனுபவித்துக் களைத்துப்போன ஜனங்களுக்கு இளைப்பாறுமிடம்.

426 **விச்வதக்ஷிண:** அச்வமேதயாகத்தில் பூமி யனைத்தையும் பிராமணர்களுக்கு தக்ஷிணையாகக் கொடுத்தவர்.

427 **விஸ்தார:** கலியுகத்தை யொழித்துக் கிருதயுகத்தை யுண்டாக்குவதனால் வேதத்தில் விவ

† இந்தத் திருநாமம்முதல் தமது நற்குணங்களுக்கு வசப்படாத துஷ்டர்களை வசப்படுத்துவதாகிய ஸம்ஹார அதிகாரத்தை வஹித்துப் பாதாளத்தில் சயனத்திலிருக்கும் கல்கியவதாரம் கூறப்படுவதாக பட்டர் திருவுள்ளம்.

ரிக்கப்படும் முறைகளை விரிவாக வெளிப்படுத்துகின்றவர்.

428 **ஸ்தாவரஸ்தாணு:** கல்கியவதாரத்தில் இப்படி தருமம் நிலைநிறுத்தப்பட்ட பிறகு ஒழிவாக இருப்பவர்.

429 **ப்ரமாணம்** க்ருதயுகத்திலுள்ளவர்களுக்கு நன்மை தீமைளைப் பகுத்து அறிவிப்பவர்.

430 **பீஜமவ்யயம்** [அவ்யயம் பீஜம்.] கலி முடியும் போதெல்லாம் திரும்பவும் தருமத்தை முளைக்கச்செய்வதனால் அழியாத வித்தாக இருப்பவர்.

431 **அர்த்த:** உத்தமாதிகாரிகளுக்குத் தாமே பயனாக இருப்பவர்.

432 **அநர்த்த:** க்ஷுத்ர பலன்களைக் கோருமவர்களால் விரும்பப்படாதவர்.

433 **மஹாகோச:** அன்பர்களுக்கு எவ்வளவு தானஞ் செய்தாலும் அழியாதவையான நவநிதிகள் முதலானவற்றைத் தமது பொக்கசச் சாலையாகவுடையவர்.

434 **மஹாபோக:** சிறந்த போகங்களனைத்தையும் தருகிறவர்.

435 **மஹாதந:** நம்போன்றவர்களுக்கு உதவக்கூடியதாக அளவற்ற பொருள்களை வைத்திருப்பவர்.

436 **அநிர்விண்ண:** * சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா !* என்று ஆழ்

வாரருளிச்செய்தபடியே உலகங்களைப்படைக்கும் விஷயத்தில் சோர்வில்லாமல் மேன்மேலும் ஊக்கங்கொள்பவர்.

437 **ஸ்தவிஷ்ட:** நக்ஷத்திர மண்டலமாகிய சிம்சுமார சக்ர ரூபியாக மிக்க விரிவாயிருப்பவர்.

438 **பூ:** த்ருவ நக்ஷத்திரத்தில் சேர்ந்து பூகோள ககோளங்களெல்லாவற்றையும் தாங்குபவர்.

439 **தர்மயூப:** தருமத்தைத் தலைமையாக வைத்திருப்பவர்.

440 **மஹாமக:** யாவராலும் பூஜிக்கத்தக்க யாகத்தைத் தமக்கு அவயவமாகவுடையவர்.

441 **நக்ஷத்ரநேமி:** நக்ஷத்திரங்களெனப்படும் ககோள சக்ரத்தை நடத்துகிறவர்.

442 **நக்ஷத்ரீ** நக்ஷத்திர மண்டலத்தைத் தாங்குகிறவர்.

443 **க்ஷம:** எல்லாவுலகங்களினுடையவும் பாரங்களை எளிதில் வஹிக்க வல்லவர்.

444 **க்ஷாம:** அவாந்தர ப்ரளயத்தில் மற்ற நக்ஷத்திரங்கள் அழிந்தபோது நான்கு நக்ஷத்திரங்களோடு மட்டும் த்ருவனுக்கருகில் இருப்பதனால் இளைத்திருப்பவர் என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் சொல்லியபடி காலவிசேஷத்தில் குறைவுபட்டிருப்பவர்.

445 ஸமீஹந : ஸ்ருஷ்டிகாலத்தில் எல்லாரையும் தம் தம் அதிகாரங்களில் ஓய்வில்லாமல் ப்ரவர்த்திக்கச் செய்பவர்.

446 யஜ்ஞ : "யாகமே விஷ்ணு" என்று வேதமும் "வேள்வியுமானுன்" என்று ஆழ்வார்களும் சொல்லியபடியே யாகஸ்வரூபியாகவுள்ளவர்.

447 இஜ்ய : காம்ய பலன்களைக் கோருகிறவர்களுக்கு இந்திரன் முதலிய தேவதைகளின் வடிவமாக ஆராதிக்கப்படுபவர்.

448 மஹேஜ்ய : காம்ய பலன்களை விரும்பாதவர்கள் தம்மையே நேராக ஆராதிப்பதைச் சிறந்த ஆராதனமாகக்கொண்டவர்.

449 க்ரது : அக்நிஷ்டோமம் முதலிய யாகங்களினுல் ஆராதிக்கப்படுபவர்.

450 ஸத்ரம் பல யஜமானர்களால் நீண்ட காலம் செய்யப்படும் ஸத்ரமென்கிற யாக விசேஷத்திஞல் ஆராதிக்கப்படுபவர்.

451 ஸதாம்கதி : ஸத்துக்களுக்குப் புகலிடமாகவுள்ளவர்.

452 ஸர்வதர்சீ எல்லாவற்றையும் கட்கூடாகக் காண வல்லவர்.

453 நிவ்ருத்தாத்மா (விமுக்தாத்மா, என்பதும் பாடம்) சப்தாதி விஷயங்களை மனத்தினுல் துறந்திருப்பவர்.

454 ஸர்வஜ்ஞ: தம்மை ஸர்வாந்தர்யாமியாக அறிந்திருப்பவர்.

455 ஜ்ஞாநம் உத்தமம் (உத்தமம் ஜ்ஞாநம்) எல்லாவற்றினுஞ் சிறந்த வைஷ்ணவ தருமத்தை யாவரும் தெரிந்துகொள்ளக் காரணமாக இருப்பவர்.

456 ஸுவ்ரத: சிறந்த விரதத்தை ஏற்றுக்கொண்டிருப்பவர்.

457 ஸுமுக: மநோஹரமான திருமுகமண்டலத்தையுடையவர்.

458 ஸூக்ஷ்ம: தியானத்தினால் மட்டும் புலப்படக்கூடிய மிக நுட்பமான ஸ்வரூபமுடையவர்.

459 ஸுகோஷ: அலையாருங் கடல்போல் முழங்கும் முதுநான்மறைகளினால் கோஷிக்கப்படுகிறவர்.

460 ஸுகத: பரமஸுகமாகிய பலனை அளிப்பவர்.

461 ஸுஹ்ருத்: எவர் விஷயத்திலும் நன்மையையே கருதும் சிறந்த மனமுள்ளவர்.

462 மநோஹர: பக்தர்களின் மனங்களைக் கவருகின்றவர்.

463 ஜிதக்ரோத: அடியார்களுக்குக் காமக்ரோதங்கள் முதலியவற்றைப் போக்குபவர்.

464 வீரபாஹு: வீரத்தன்மை வாய்ந்த திருத்தோள்களையுடையவர்.

465 **விதாரண :** ஆஸுர ப்ரக்ருதிகளைச் சேதிப்பவர்.

466 **ஸ்வாபந :** அழகிய புன்சிரிப்பு இனிய நோக்கு முதலியவற்ருல் அன்பர்களை அயரும்படி செய்பவர்.

467 **ஸ்வவச :** தம் இஷ்டப்படி மகிழ்ந்திருப்பவர்.

468 **வ்யாபீ** எல்லாரிடத்திலும் வியாபித்திருப்பவர்.

469 **நைகாத்மா** பலவுருவங்களெடுத்தவர்.

470 **நைககர்மக்ருத்** பல செய்கைகளைச் செய்பவர்.

471 **வத்ஸர :** விலக்ஷணரூபத்துடன் எல்லாரிடத்திலும் அந்தர்யாமியாக வஸிப்பவர்.

472 **வத்ஸல :** அடியார்களிடத்தில் பேரன்பு பூண்டிருப்பவர்.

473 **வத்ஸீ** ஆத்மவர்க்கங்களை மிகுதியாக வுடையவர்.

474 **ரத்நகர்ப்ப :** அடியார்களுக்கு அளிக்கவேண்டியிருந்த தனங்களைத் தம்மிடம் வைத்திருப்பவர்.

475 **தநேச்வர :** அவரவர்கள் விரும்பின ஐச்வரியங்களை உடனேயளிப்பவர்.

476 **தர்மகுப்** தர்மத்தைக் காப்பவர்.

477 **தர்மக்ருத்** எல்லாரையும் தர்மிஷ்டர்களாகச் செய்பவர்.

478 **தர்மீ** எல்லாவற்றையும் காப்பாற்றுவதற்கு தருமத்தையே பொதுவான கருவியாகக் கொண்டிருப்பவர்.

479 †**ஸத்** "உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமனென்று முளன் கண்டாய்" என்கிறபடியே எப்போதும் உளனுயிருப்பவர்.

480 **அக்ஷரம்ஸத்** எக்காலத்திலும் எத்தேசத்திலும் குணங்களும் ஸ்வரூபமும் குறைபடாதிருப்பவர்.

481 **அஸத்** தீயவர்களுக்கு நீண்டகாலம் முடிவில்லாத ஸம்ஸார துக்கத்தைக் கொடுப்பதனுல் அநித்யமாகிய துக்க ரூபமாக இருப்பவர்.

482 **அஸத்க்ஷரம்:** தீயவர்களிடத்தில் நில்லாமல் செல்பவர்.

483 **அவிஜ்ஞாதா** அடியார்களது குற்றங்களையறியாதவர்.

484 **ஸஹஸ்ராம்சு:** அளவற்ற ஞானங்களையுடையவர்.

485 **விதாதா** அடியானுடைய குற்றங்களை க்ஷமிக்கும்போது, பாவங்களுக்குப் பலன்களைத் தரத்

---

† இவ்விடத்தில் "ஸதஸத் க்ஷரமரக்ஷம்" என்று சங்கர பாஷ்யப்படி மூலப்பாடம்; "ஸதக்ஷர மஸத்க்ஷரம்" என்று பட்டர் பாஷ்யப்படி மூலபாடம். 'ஸத்' என்பதைத் தனியே ஒரு நாமமாகவும் பிறகு அக்ஷரம் என்பதோடு கூட்டியும் பட்டர் பாஷ்யமருளிச் செய்துளர்.

தக்க யமனும் அவனுல் செய்யப்படும் வேதனைகளும் அவ்வடியாரை யாதொன்றும் செய்யாதபடி தாமே நடத்துகிறவர்.

486 **க்ருதலக்ஷண :** தாம் அநுக்ரஹிக்கத் தக்கவர்களுக்குத் தாமே அடையாளம் செய்திருப்பவர். [மித்ர பாவனையோடு வந்தாலும் கைவிடமாட்டேனென்கிற உறுதி இங்குக் கொள்ளத் தக்கது.]

487 **கபஸ்திநேமி :** கிரணங்களால் ஒளிர்கின்ற ஆயிரம் முனைகளோடு கூடிய சக்கரத்தை யுடையவர்.

488 **ஸத்வஸ்த :** சரணுகதர்களுடைய உள்ளத்திலுறைபவர்.

489 **ஸிம்ஹ :** ஆச்ரிதர்கட்கு விரோதிகளாயுள்ளவர்களை ஹிம்சிப்பவர்.

490 **பூதமஹேச்வர :** எல்லாப் பிராணிகளையும் நியமிக்கின்ற பிரமன் யமன் முதலானோர்க்கும் நியாமகர்.

491 **ஆதிதேவ :** ஸகல தேவர்களுக்கும் மூத்தவராகி விளங்குபவர்.

492 **மஹாதேவ :** மேம்பட்டவர்களான பிரமன் முதலானவர்களை வைத்துக்கொண்டு விளையாடுபவர்.

493 **தேவேச :** பிரமன் முதலிய தேவர்களை அவரவர்களுக்குரிய பதவிகளில் நியமிப்பவர்.

494 **தேவப்ருத் :** தேவர்களுக்கு நிர்வாஹகர்.

495 **குரு :** முதன்மையான ஆசாரியர்.

496 **உத்தர :** பிரமன் முதலிய தேவர்களை ஆபத்துக்களில் நின்றும் கரையேற்றுபவர்.

497 **கோபதி :** ஸகல வாக்குகளையும் நடத்துபவர்.

498 **கோப்தா :** எல்லா வித்தைகளையும் காப்பாற்றுகிறவர்.

499 **ஜ்ஞாநகம்ய :** ஞானத்தினல் அறியத்தகுந்தவர்.

500 **புராதந :** அநாதிஸித்தர்.

ஸஹஸ்ரநாமத்தில் ஐந்தாவது நூறு முற்றிற்று.

---

## ஆருவது நூறு

501 **சரீரபூதப்ருத் :** தமது சரீரமாகிய ஸகல பூதங்களையும் உயிராகத் தாங்கியிருக்குமவர்.

502 **போக்தா :** ஹவ்ய கவ்யங்களெல்லாவற்றையும் புஜிப்பவர்.

503 **கபீந்த்ர :** ஸ்ரீ ராமாவதாரத்தில் வானரவுருக்கொண்ட தேவர்களுக்குத் தலைவராக இருந்தவர்.

504 **பூரிதக்ஷிண :** தர்மஸ்தாபனத்திற்காக உலகில் பல யாகங்களை நடத்தி அவற்றில் அபரிமித மான தக்ஷிணைகளைக் கொடுத்தவர்.

505 **ஸோமப :** தாம் செய்த அந்த யாகங்களில் ஸோமரஸத்தைப் பானம் பண்ணினவர்.

506 **அம்ருதப :** அன்பர்களுக்குப் பரமபதத்தில் தம்மை யநுபவிப்பதாகிய அம்ருதம் என்கிற பரமானந்தத்தைக் காப்பாற்றுகிறவர்.

507 **ஸோம :** தாமே அம்ருதமாக இருப்பவர்.

508 **புருஜித் :** அவதாரங்களில் பலரை வெல்பவர்.

509 **புருஸத்தம :** தமது திருக்குணங்களை யநுபவிக்க விரும்பும் பலரிடத்தில் ஸ்திரமாக விருப்பவர்.

510 **விநய :** ஆஸுரப்ரக்ருதிகளைத் தமது பராக்ர மத்தினால் தண்டித்து அடக்கினவர்.

511 **ஜய :** ஆச்ரிதர்களால் வெல்லப்பட்டு அவர் களுக்குத் தோற்று ஏவல் தொழில் செய்பவர்.

512 **ஸத்ய ஸந்த :** அடியார்களைக் காப்பாற்றும் விஷயத்தில் சொன்னசொல் தவருதவர்.

513 **தாசார்ஹ :** யாதவ குலத்தில் கண்ணனுகத் தோன்றினவர்.

514 **ஸாத்வதாம்பதி :** பாஞ்சராத்ர சாஸ்த்ரத்தைப் பிரவர்த்திப்பித்து ஸாத்வதர்களென்னும் பாகவதர்களைக் காப்பாற்றுபவர்.

515 **ஜீவ:** பாஞ்சராத்ர விதிப்படி தம்மை ஆராதிப் பவர்களை உஜ்ஜீவிக்கச் செய்பவர்.

516 **விநயிதா:** பாகவதர்களை ராஜகுமாரர்களைப் போல ஆதரித்துக் காப்பாற்றுகிறவர்.

517 **ஸாக்ஷீ:** அந்த பாகவதர்களின் ஒழுக்கங்களை ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பவர்.

518 **முகுந்த:** முக்தியைக் கொடுப்பவர்.

519 **அமிதவிக்ரம:** அளவற்ற பராக்ரம முடையவர்.

520 **அம்போநிதி:** கடல் வடிவமாகவுள்ளவர்.

521 **அநந்தாத்மா:** ஆதிசேஷனுக்கு ஆத்மாவாக இருப்பவர்.

522 **மஹோததி சய:** பெருங்கடலில் பள்ளிகொள் பவர்.

523 **அந்தக:** பிரளய காலத்தில் எல்லாவற்றையு மழிப்பவர்.

524 **அஜ:** அகாரத்தின் பொருளாகத் தோன்றி யவர்.

525 **மஹார்ஹ:** ஆராதனைக்கு உரியவர்.

526 **ஸ்வாபாவ்ய:** இயற்கையாகவே ஸ்வாமியாக அமைந்தவர்.

527 **ஜித அமித்ர:** பகைவர்களை வென்றவர்.

528 **ப்ரமோதந:** தம்மைச் சிந்தனை செய்பவர்களை மகிழ்விப்பவர்—அவகர்ளது மகிழ்ச்சியைக் கண்டு தாம் மகிழ்பவர்.

529 **ஆநந்த:** தைத்திரீய உபநிஷத்தில் ஆனந்த வல்லியிற் சொன்னபடி வாக்குக்கும் மனத்திற்கு மெட்டாத பேரானந்த முடையவர்.

530 **நந்தந:** தம்முடைய ப்ரஹ்மானந்தத்தை மோக்ஷத்தில் அளிப்பவர்.

531 **நந்த:** ஆனந்தத்திற் குரிய எல்லாப்பொருள் களும் தம்மிடம் நிரம்பியிருக்கப் பெற்றவர்.

532 **ஸத்யதர்மா:** தம்முடைய தருமமாகிய சரணாகத ரக்ஷணத்தைத் தவறாது நடத்துபவர்.

533 **த்ரிவிக்ரம:** மூன்று வேதங்களிலும் வியாபித்தவர்.

534 **மஹர்ஷி:** வேதங்களையெல்லாம் நேராகக் கண்டறிந்தவர்.

535 **கபிலாசார்ய:** கபிலர் என்கிற ஆசார்யராகத் தோன்றியவர்.

536 **க்ருதஜ்ஞ:** அபராதங்களைத் தவிர்த்து நல்வினைகளை மட்டுமே அறிபவர்.

537 **மேதிநீபதி:** பூமிக்கு நாதர்.

538 **த்ரிபத:** ப்ரணவத்திலுள்ள அகார உகார மகாரங்களாகிய மூன்று பதங்களாலும் சொல்லப் படுபவர்.

539 **த்ரிதசாத்யக்ஷ:** பிரமன் முதலிய தேவர்களைக் காப்பாற்றின பிரபு.

540 **மஹாச்ருங்க:** பூமண்டல மெல்லாம் முனையில் ஒட்டிக்கொண்டிருக்கும்படி பெரிதான கோரப் பல்லை யுடையவர்.

541 **க்ருதாந்தக்ருத்:** யமனைப் போன்ற ஹிரண்யாக்ஷனெனும் கொடிய அசுரனை அறுத்தவர்.

542 **மஹாவராஹ:** பூமியை யிடந்தெடுக்க ஒப்புயர்வற்ற வராஹ ரூபியானவர்.

543 **கோவிந்த:** (மஹாவராஹ ரூபியாகி) பூமியைத் திரும்பவும் அடைந்தவர்.

544 **ஸுஷேண:** அன்பர்களை வசப்படுத்துவதற்கு உரிய நல்ல கருவிகளை யுடையவர்.

545 **கநகாங்கதீ:** அப்ராக்ருதமான தோள்வளைகள் முதலிய திவ்விய பூஷணங்களை யெப்பொழுதும் அணிந்துகொண்டிருப்பவர்.

546 **குஹ்ய:** உபநிஷத்துக்களினால் மட்டும் அறியத் தக்கதும் வெளிப்படையாகப் புலப்படாதது மான திவ்விய மங்கள விக்ரஹத்தையுடையவர்.

547 **கபீர:** அகாதமான மகிமை வாய்ந்தவர்.

548 **கஹந:** அளவற்றிருப்பதனால் கிரஹிக்கக் கூடாதவர்.

549 குப்த: தம் மஹிமையையுணர்ந்த பூருவாசாரி யர்களால் ரக்ஷிக்கப்பட்டவர்.

550 சக்ரகதாதர: கதை, சக்ரம் முதலிய திவ்யாயு தங்களை யுடையவர்.

551 வேதா: அன்பர்களுக்கு மங்கலமான விபவங் களைச் செய்பவர்.

552 ஸ்வாங்க: தமது ஸர்வேச்வரத்தன்மைக்கு அங்கமான குடை சாமரம் முதலிய பரிகரங் களையுடையவர்.

553 அஜித: 'அஜிதை' என்னும் ஸ்ரீ வைகுண்ட நகருக்கு அதிபதி.

554 க்ருஷ்ண: கார்முகில் போன்ற கறுத்த நிற முடையவர்.

555 த்ருட: பாஹ்யகுத்ருஷ்டிகளின் துர்வாதங்களி லும் அசைக்க முடியாதபடி த்ருட ப்ரமாண ஸித்தர்.

556 ஸங்கர்ஷண: சேதநா சேதநங்களைத் தம்மிடத் தில் ஒன்று சேரும்படி ஆகர்ஷிப்பவர்.

557 அச்யுத: தம்முடைய பதவியிலிருந்து ஒரு காலும் நழுவாதவர்.

558 வருண: எல்லாவற்றையும் மறைத்துக்கொண் டிருப்பவர்.

559 **வாருண :** தம்மை ஸ்வாமியாக வரிக்கின்ற பக்தர்களிட மிருப்பவர்.

560 **வ்ருஷ :** நிழல்தரும் மரம்போல அன்பர்கள் வந்தடைவதற்கு ஆச்ரயமா யிருப்பவர்.

561 **புஷ்கராக்ஷ :** கருணை பொழிந்து அன்பர்களைப் போஷிக்கும் திருக் கண்களை யுடையவர்.

562 **மஹாமநா :** "உன்னடியார்க்கு என் செய்வனென்றேயிருத்தி நீ" என்கிறபடியே அன்பர்களுக்கு எவ்வளவு நன்மைகள் செய்தும் த்ருப்தி பெறாத விசாலமான மனமுள்ளவர்.

563 **பகவாந் :** கல்யாண குணங்களை நிரம்பியிருப்பவர்.

564 **பகஹா :** ஐச்வரியம் வீரியம் கீர்த்தி லக்ஷ்மி ஞானம் வைராக்யம் என்கிற இவ்வாறு குணங்களையும் அடைந்திருப்பவர்.

565 **நந்தீ :** நந்தகோபரைத் தந்தையாகப் பெற்றவர்.

566 **வநமாலீ :** வைஜயந்தி யென்னப்படும் வனமாலையை யணிந்திருப்பவர்.

567 **ஹலாயுத :** பலராமாவதாரத்தில் கலப்பையை ஆயுதமாகக் கொண்டவர்.

568 **ஆதித்ய :** முற்பிறப்பில் அதிதியாகவிருந்த தேவகியின் புதல்வர்.

569 **ஜ்யோதிராதித்ய :** அப்ராக்ருதமாய் ஆச்சர்ய தேஜோமயமான ஸூர்யன்.

570 **ஸஹிஷ்ணு :** அடியார்களின் அபராதங்களைப் பொறுப்பவர்.

571 **கதிஸத்தம :** தத்துவங்களைச் செவ்வனே யுணர்ந்து, உணர்ந்தபடியுரைப்பவர்.

572 **ஸுதந்வா :** சிறந்த வில்லை ஏந்தியுள்ளவர்.

573 **கண்டபரசு :** பகைவரைக் கண்டிக்கவல்ல கோடாலிப்படையை யுடையவர்.

574 **தாருண :** வெளிப்பகைவர்களையும் உட்பகைவர்களையும் சிதைப்பவர்.

575 **த்ரவிணப்ரத :** வ்யாஸரூபியாய்க்கொண்டு சாஸ்த்ரார்த்தங்களாகிற தனங்களை நிரம்பக் கொடுப்பவர்.

576 **திவிஸ்ப்ருக் :** கட்புலனுக்கு எட்டாததையும் அறியவல்ல ஞானப் பெருமை யுடையவர்.

577 **ஸர்வத்ருக் :** எல்லாவற்றையுங் கண்டறிகிறவர்.

578 **வ்யாஸ :** வேதங்களை வகுத்ததினால் வ்யாஸரென்று பேர்பெற்ற முனிவரை ஆவேசித்திருந்தவர்.

579 **வாசஸ்பதி :** வ்யாஸரூபியாயிருந்து ஐந்தாவது வேதமான மஹாபாரதமென்னும் ஸரஸ்வதிக்கு ஸ்வாமியானவர்.

580 **அயோநிஜ:** யோனிப் பிறப்பு இல்லாதவர்.

581 **த்ரிஸாமா:** தம்மைச் சொல்லுகிற ப்ருஹத், ரதந்தரம், வாமதேவ்யம் என மூன்று வகைப் பட்ட ஸாமங்களினால் கானஞ் செய்யப்படு பவர்.

582 **ஸாமக:** ப்ரஹ்மாநுபவ ஆனந்தத்தினால் அந்த ஸாமங்களைத் தாமும் பாடிக்கொண்டிருப் பவர்.

583 **ஸாம:** ஸாமவேத ஸ்வரூபியானவர்.

584 **நிர்வாணம்:** முக்தி ஸ்வரூபமாயிருப்பவர்.

585 **பேஷஜம்:** பிறவியெனும் பிணிக்கு மருந்தாயிருப் பவர்.

586 **பிஷக்:** "மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணா" என்ற ஆழ்வாரருளிச் செயலின்படி பிறவியென்னும் பிணிக்குப் பரிஹாரமுணர்ந்த வைத்யர்.

587 **ஸந்ந்யாஸக்ருத்:** பிறவி நோய் தீருவதற்குக் காரணமான ஸாத்விக த்யாகத்தைச் செய்விப் பவர்.

588 **சம:** அடக்கவேண்டிய காமக்ரோதம் முதலிய வற்றை அடக்குவதற்கு வழிகாட்டியவர்.

589 **சாந்த:** அலையோய்ந்த கடல்போல சாந்தமூர்த் தியாக வுள்ளவர்.

590 நிஷ்டா ஆதாரமாயிருப்பவர்.

591 சாந்தி: எல்லாவற்றையும் மறந்து தம்மையே அநுபவித்துக் கொண்டிருக்கச் செய்பவர்.

592 பராயணம்: மோக்ஷத்திற்குச் சிறந்த வுபாயமான பரம பக்தியைத் தாமே அளிப்பவர். [பராயண: என்பதும் பாடம். சிறந்த ஸ்தானத்தையுடையவர் என்று பொருள்.]

593 சுபாங்க: யோகத்தின் அங்கங்களான யமம் நியமம் முதலானவற்றை நிறைவேற்றுகிறவர்.

594 சாந்தித: தமது ஸாயுஜ்யமாகிய சாந்தி நிலையைக் கொடுப்பவர்.

595 ஸ்ரஷ்டா: கரணகளேபர ப்ரதானஞ் செய்து படைப்பவர்.

596 குமுத: இந்நிலவுலகத்திலுள்ள சேதநர்களுக்கு வேண்டிய போகங்களை யளித்து மகிழ்ந்திருப்பவர்.

597 குவலேசய: இந்நிலத்திலேயே பிறந்து பிறந்தும் உழன்று கொண்டிருக்கும் ஜீவராசிகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அவர்களை நடத்துபவர்.

598 கோஹித: பூமிக்கு நன்மை செய்பவர்.

599 கோபதி: போக பூமியான சுவர்க்கத்திற்கும் ஸ்வாமி.

600 **கோப்தா :** இம்மையிலுள்ள கரும பலன்களனைத்தையும் ரக்ஷிப்பவர்.

ஸஹஸ்ரநாமத்தில் ஆருவது நூறு முற்றிற்று.

---

## ஏழாவது நூறு

601 **வ்ருஷபாக்ஷ:** தருமத்தின் வழியாகக் கரும பலன்களை ரக்ஷிப்பவர்.

602 **வ்ருஷப்ரிய:** தருமங்களில் அன்பு வைத்திருப்பவர்.

603 **அநிவர்த்தீ:** ப்ரவ்ருத்தி தர்ம நிஷ்டர்களை மீளவும் இவ்வுலகில் பிறப்பிப்பதனுல் அவர்களை ஸம்ஸாரத்தை விட்டு நிவர்த்திக்கச் செய்யாதவர்.

604 **நிவ்ருத்தாத்மா:** நிவ்ருத்தி தர்மத்திலிருப்பவர்களுக்கும் ஈசுவரராயிருப்பவர்.

605 **ஸம்க்ஷேப்தா:** ப்ரவ்ருத்தி தர்மத்திலிருப்பவர்களுக்கு அறிவும் மகிமையும் குறுகும்படி செய்பவர்.

606 **க்ஷேமக்ருத்:** நிவ்ருத்தி தர்ம நிஷ்டர்களுக்கு அறிவும் மகிமையும் சுருங்காமல் விரிவாகும்படி மோக்ஷமென்கிற க்ஷேமத்தை யளிப்பவர்.

607 **சிவ:** நல்லோர்களுக்கு நன்மைகளைச் செய்பவர்.

608 ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸ்ரீ வத்ஸமென்னும் மச்சத்தைத் திருமார்பிலுடையவர்.

609 ஸ்ரீவாஸ: ஸ்ரீ மஹாலக்ஷ்மி எப்போதும் தம்மிடத்தே வாஸஞ் செய்யப் பெற்றவர்.

610 ஸ்ரீபதி: திருமாமகள் கொழுநன்.

611 ஸ்ரீமதாம் வர: செல்வச் சிறப்பு பொருந்தின பிரமன் முதலியோரெல்லாரினுஞ் சிறந்தவர்.

612 ஸ்ரீத: பிராட்டிக்கு ஸ்ரீ யென்கிற பெயரையளித்தவர்.

613 ஸ்ரீச: பிராட்டிக்கும் அவ்வளவு பெருமை வந்ததற்குக் காரணபூதர்.

614 ஸ்ரீநிவாஸ: பிராட்டிக்கு எப்போதும் சேர்விடமாக வுள்ளவர்.

615 ஸ்ரீநிதி: பிராட்டிக்கு நிதியாகவுள்ளவர்.

616 ஸ்ரீவிபாவந: பிராட்டியினுலேயே தமக்குச் சிறப்பு உண்டாகப் பெற்றிருப்பவர்.

617 ஸ்ரீதர: பிராட்டியை எஞ்ஞான்றும் தரித்திருப்பவர்.

618 ஸ்ரீகர: தம் அவதாரங்களுக் கொத்தபடி பிராட்டியை அவதரிக்கச் செய்பவர்.

619 **ச்ரேய : ஸ்ரீமாந் :** எல்லாப் புருஷார்த்தங்களுக்காகவும் எல்லாராலும் ஆச்ரயிக்கப்படத்தக்க பிராட்டியானவள் தம்பிடத்தில் எப்போதும் சேர்ந்திருக்கப் பெற்றவர்.

620 **லோகத்ரயாச்ரய :** பிராட்டியும் தாமுமாகச் சேர்ந்து மூவுலகங்கட்கும் ஆதாரமாயிருப்பவர்.

621 **ஸ்வக்ஷ :** அழகிய திருக்கண்கள் முதலான திவ்யேந்த்ரியங்களுள்ளவர்.

622 **ஸ்வங்க :** மிகச் சிறந்த திவ்யமங்கள விக்ரஹமுடையவர்.

623 **சதாநந்த :** பேரானந்தம் கரை கடந்து மேன் மேலும் பெருகப் பெற்றவர்.

624 **நந்தி :** எப்போதும் ஆனந்தம் நிறைந்திருப்பவர்.

625 **ஜ்யோதிர் கணேச்வர :** ஒளியுருவமாக விளங்குகின்ற நித்யஸூரிகளின் கூட்டங்கள் எப்போதும் அடிபணிந்து கைங்கரியம் செய்யப்பெற்றவர்.

626 **விஜிதாத்மா :** அன்பர்கள் விஷயத்தில் தாழ்ந்து இணங்கும்படியிருப்பவர்.

627 **விதேயாத்மா :** பக்தர்கள் கட்டளையிடப்பெற்று அதற்கிணங்கி நடப்பவர்.

628 **ஸத்கீர்த்தி :** சிறந்த கீர்த்தி வாய்ந்தவர்.

629 **சிந்நஸம்சய :** 'இவர் வசப்படுவரோ மாட்டாரோ? ஸுலபரோ துர்லபரோ?' என்று தோன்றும் ஸந்தேகங்களைத் தமது ஸௌலப்யத்தைக் காட்டித் தீர்க்குமவர்.

630 **உதீர்ண :** உட்கண்ணால் மாத்திரமன்றிக்கே கட்கண்ணாலும் காணலாம்படி வெளிப்படையாக அவதரிப்பவர்.

631 **ஸர்வதச் சக்ஷு :** ப்ரத்யக்ஷமாக அவதரித்து எல்லாவிடங்களிலும் எல்லாருடைய கண்களுக்கும் புலப்படுபவர்.

632 **அநீச :** பக்தர்களுக்குப் பரதந்திரமாயிருக்குந் தன்மையினால் ஸ்வாதந்திரியமில்லாதவர்.

633 **சாச்வதஸ்திர :** அர்ச்சா விக்ரஹங்களில் அவற்றிற்கேற்ற வுருவங்களோடு சாச்வதமாக எழுந்தருளியிருப்பவர்.

634 **பூசய :** அன்பர்கள் உகந்த விடங்களில் படுகாடு கிடப்பவர்.

635 **பூஷண :** ஸௌலப்ய குணத்தையே தமக்கு அலங்காரமாகவுடையவர்.

636 **பூதி :** அன்பர்களுக்கு எல்லாச் செல்வமுமாக இருப்பவர்.

637 **அசோக:** (விசோக: என்பதும் பாடம்.) அன்பர்களைக் காப்பாற்றுவதனல் அவர்களை யிழந் தோமென்று துக்கப்படவேண்டாதவர்.

638 **சோகநாசந:** துக்கங்களைத் தீர்ப்பவர்.

639 **அர்ச்சிஷ்மாந்:** அப்ராக்ருதமான பேரொளியை யுடையவர்.

640 **அர்ச்சித:** அர்ச்சா மூர்த்தியாகி அர்ச்சனைக்கு எளியரானவர்.

641 **கும்ப:** வடிவழகு முதலியவற்றினல் பக்தர் களால் விரும்பப்படுபவர்.

642 **விசுத்தாத்மா:** தமது ஸ்வரூபங்களை யெல்லாம் பக்தர்களுக்கே ஒப்பித்திருப்பவர்.

643 **விசோதந:** பக்தர்களைப் பரிசுத்தப்படுத்துகிற வர்.

644 **அநிருத்த:** அநிருத்த வ்யூஹத்தின் அவதார மான ஜநார்த்தநரா யிருப்பவர்.

645 **அப்ரதிரத:** விரோதிகளைத் தொலைப்பதில் தடுப் பவர் யாருமில்லாதிருப்பவர்.

646 **ப்ரத்யும்ந:** எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்பவர்.

647 **அமித விக்ரம:** த்ரிவிக்ர மாவதாரத்தில் மூவு லகங்களிலும் தமது திருவடிப்பதிப்பு அடங் காமலிருப்பவர்.

648 **கால நேமி நிஹா :** காலச் சக்கரத்தின் வட்டை யாகிய அவித்யை யென்னப்படும் கலிகல்ம ஷத்தை அழிப்பவர்.

649 **சௌரி :** வஸுதேவபுத்திரர். (அல்லது) திருக் கண்ணபுரத்தில் சௌரிப்பெருமாளென்னுந் திருநாமத்தோடு நிற்பவர்.

650 **சூர :** சூரரான இராமபிரானுகத் தோன்றின வர்.

651 **சூரஜநேச்வர :** ஸுக்ரீவன் ஹநுமான் முதலான சூர ஜனங்களுக்குத் தலைவர்.

652 **த்ரிலோகாத்மா :** பக்தாநுக்ரஹத்திற்காக மூவு லகங்களிலும் செல்பவர்.

653 **த்ரிலோகேச :** மூவுலகங்கட்கும் பிரபு.

654 **கேசவ :** பிரமனுக்கும் சிவனுக்கும் தலைவர்.

655 **கேசிஹா :** கேசியென்கிற பெயருடன் குதிரை வடிவாக வந்த அசுரனைக் கொன்றவர்.

656 **ஹரி :** ஆர்த்திகளை ஹரிப்பவர்.

657 **காமதேவ :** விரும்பினவற்றை யெல்லாமளிப் பவர்.

658 **காமபால :** தாம் அளித்த பேறுகளைப் பரிபால னம் செய்பவர்.

659 **காமீ:** சிறந்த பலன்களெல்லாம் தாம் கொடுக்க அவை தம்மிடத்தில் குறையற நிரம்பியிருக்கப் பெற்றவர்.

660 **காந்த:** அளவுகடந்த அழகு வாய்ந்தவர்.

661 **க்ருதாகம:** * கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்தவர்.

662 **அநிர்தேச்யவபு:** இவ்விதமென்று நிரூபிக்கக் கூடாத திவ்யமங்கள விக்ரஹங்களை யுடையவர்.

663 **விஷ்ணு:** எல்லாவற்றையும் வியாபித்திருப்பவர்.

664 **வீர:** * சாதுசனத்தை நலியும் தீயவர்களைத் தகர்க்கவல்ல வீர்யமுடையவர்.

665 **அநந்த:** அநந்த மூர்த்தி யென்று சொல்லப்படுபவர்.

666 **தநஞ்ஜய:** தனத்தைக்காட்டிலும்மிக விரும்பத் தக்கவர்.

667 **ப்ரஹ்மண்ய:** சேதநா சேதநங்களாகிற பெரிய வஸ்துக்களுக்கெல்லாம் அநுகூலராயிருப்பவர்.

668 **ப்ரஹ்மக்ருத்ப்ரஹ்மா:** விஸ்தீர்ணமான உலகங்களைப் படைப்பவராகிய பிரமனுக்கும் நியாமகர்.

669 ப்ரஹ்ம : பரப்ரஹ்ம மெனப்படுபவர்.

670 ப்ரஹ்மவிவர்த்தந : தவம் முதலிய தருமங்களை அபிவிருத்தி செய்பவர்.

671 ப்ரஹ்மவித் : வேதங்களின் முடிவை யறிந்திருப்பவர்.

672 ப்ராஹ்மண : தத்தாத்ரேய ரென்னும் அந்தணராக அவதரித்தவர்.

673 ப்ரஹ்மீ : ப்ரஹ்மமெனப்படும் ப்ரமாண ப்ரமேயங்களனைத்தையுமுடையவர்.

674 ப்ரஹ்மஜ்ஞ : வேதங்களை ஸாக்ஷாத் கரித்தவர்.

675 ப்ராஹ்மணப்ரிய : வேதம்வல்ல அந்தணர்களை அன்பர்களாகவுடையவர்.

676 மஹாக்ரம : சேதநர்களுஜ்ஜீவிப்பதற் கிடாகப் படிப்படியாக உபாயங்களைக் காட்டியிருப்பவர்.

677 மஹாகர்மா : சிறந்த செய்கைகளையுடையவர்.

678 மஹாதேஜா : இருள்தருமா ஞாலத்தின் அகவிருளை யொழிக்கும்படியான பேரொளியுள்ளவர்.

679 மஹோரக : மிகப் பெரியவராயிருந்து அற்பர்களினுடையவும் ஹ்ருதயத்தினுள் பிரவேசித்திருப்பவர்.

680 **மஹாக்ரது :** பெரிய யாகங்களினுல் ஆராதிக்கப் படுபவர்.

681 **மஹாயஜ்வா :** தம்மை ஆராதிப்பவர்களைச் சிறந்தவர்களாகச் செய்பவர்.

682 **மஹாயஜ்ஞ :** தம்மையாராதிப்பது எல்லா ஆராதனங்களினும் மேம்பட்டதாக இருப்பவர்.

683 **மஹாஹவி :** ஆத்மாவென்னும் சிறந்த ஹவிஸ்ஸை அங்கீகரிப்பவர்.

684 **ஸ்தவ்ய :** ஸ்தோத்திரம் செய்யத் தகுந்தவர்.

685 **ஸ்தவப்ரிய :** யார் எவ்வகையாகத் தோத்திரஞ் செய்தாலும் அதை அன்புடன் ஏற்பவர்.

686 **ஸ்தோத்ரம் :** அவரவர்கள் செய்யும் தோத்திரமும் தம்முடைய அநுக்ரஹத்தினுலேயே உண்டாவதனுல் தோத்திரமும் தாமேயாக இருப்பவர்.

687 **ஸ்துத :** நித்ய முக்தர்கள் முதற்கொண்டு நம்மனவாசவுள்ள யாவராலும் * அவரவர் தாந்தாமறிந்தவாறேத்த நிற்பவர்.

688 **ஸ்தோதா :** தம்மைத் துதிக்கின்றவர்களைத் தாம் புகழுபவர்.

689 **ரணப்ரிய :** ஸாது பரித்ராணத்தின் பொருட்டு அரக்கரசுரர்போல் வாரோடு யுத்தஞ் செய்வதி லும் விருப்பமுள்ளவர்.

690 பூர்ண: அவாப்த ஸமஸ்த காமரென்னும்படி எல்லாம் நிறைவேறப் பெற்றவர்.

691 பூரயிதா: பக்தர்களின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்விப்பவர்.

692 புண்ய: பாபிகளையும் புனிதராகச் செய்பவர்.

693 புண்யகீர்த்தி: தம்மைப் பற்றி ஸங்கீர்த்தனஞ் செய்வதானது ஸகல பாபங்களையும் போக்க வல்லதாக இருப்பவர்.

694 அநாமய: பிறவியென்னும் பெரும்பிணிக்குப் பகையானவர்.

695 மநோஜவ: பக்தர்களின் அபீஷ்டங்களை மனோ வேகமாகச் செய்து முடிப்பவர்.

696 தீர்த்தகர: பரம பவித்திரங்களான கங்கை முத லிய புண்ய தீர்த்தங்களை உண்டு பண்ணினவர்

697 வஸுரேதா: தம்முடைய திவ்ய தேஜஸ்ஸையே அவதாரத்திற்குக் காரணமாகவுடையவர்.

698 வஸுப்ரத: சிறந்த நிதியாகிய தம்மையே தரு பவர்.

699 வஸுப்ரத: தம்மை யடுத்தவர்களுக்குச் சிறந்த மேன்மையை யளிப்பவர்.

700 வாஸுதேவ: வஸுதேவ குமாரனைகத் திருவ வதாரம் செய்தவர்.

ஸஹஸ்ரநாமத்தில் எழாவது நூறு முற்றிற்று.

---

## எட்டாவது நூறு

701 **வஸு:** அவதாரகந்தமாகத் திருப்பாற்கடலில் வஸிப்பவர்.

702 **வஸுமநா:** வஸுதேவரிடத்தில் மனம் வைத்தவர்.

703 **ஹவி:** வஸுதேவரிடமிருந்து நந்தகோபர் பக்கலில் விருந்தாக வந்து சேர்ந்தவர்.

704 **ஸத்கதி:** ஸாதுக்களைக் காப்பாற்றி அவர்களுக்குக் கதியாயிருப்பவர்.

705 **ஸத்க்ருதி:** வெண்ணெய் களவுகண்டது உரவினிடை யாப்புண்டது குரவை கோத்தது முதலான திவ்ய சரிதைகளை யுடையவர்.

706 **ஸத்தா:** ஸாதுக்களுக்குத் தாமே ஸத்தையாக இருப்பவர். (ஸத்தையாவது இருப்பு; * நன்றாக நானுன்னையன்றி யிலேன் கண்டாய், நாரணனே! நீ யென்னையன்றி யிலை* என்னும் படியிருத்தல்.)

707 **ஸத்பூதி:** ஸத்துக்களுக்குப் புத்ர பந்து தாரதஸாரதி ப்ரப்ருதிகளான எல்லாவகை யுதவிகளும் தாமேயாக இருப்பவர.

708 **ஸத்பராயண:** ஸத்துக்களையே தமக்கு முக்கிய ஆதாரமாகக் கொண்டிருப்பவர். 'ஸத்பராயணம்' என்ற பாடத்தில் ஸத்துக்களுக்குப் பரம ஆச்ரயமாக இருப்பவர் என்க.

709 சூரஸேந : பூமி பாரத்தைத் தீர்க்கும் விஷயத்தில் யாதவர்கள் பாண்டவர்கள் முதலான சூரர்களைத் தமக்குத் துணையான சேனையாகக் கொண்டிருப்பவர்.

710 யதுச்ரேஷ்ட : யயாதி சாபத்தினாலே அதோகதி யடைந்திருந்த யதுவம்சத்தை யுத்தரிப்பித்த தனால் யதுக்களில் சிறந்தவர்.

711 ஸந்நிவாஸ : ஸத்புருஷர்கள் இளைப்பாறுவதற்கு வந்து ஒதுங்குமிடமாயிருப்பவர்.

712 ஸுயாமுந : தாம் யமுனையிற் செய்த ஜலக்ரீடை முதலிய காரியகளெல்லாம் ஸுக்ருதமாக இருக்கப் பெற்றவர்.

713 பூதாவாஸ : எல்லாப் பிராணிகளும் தம்மை எளிதில் ஆச்ரயிக்கும்படி யிருந்தவர்.

714 வாஸுதேவ : த்வாதசாக்ஷர மந்த்ரத்தை யுபதேசித்த வாஸுதேவ வ்யூஹமாக இருப்பவர்.

715 ஸர்வாஸுநிலய : எல்லாருடைய உயிர்களுக்கும் இருப்பிடமானவர். [எல்லாரும் தம்மிடத்திலேயே பிராணனை வைத்திருக்கும்படியாக மனோஹரராயிருப்பவர்.

716 அநல : அடியார்களுக்கு எது செய்தும் போதுமென்று நினையாதவர் ; மேன்மேலும் நன்மைகள் செய்வதிலேயே ருசியுடையவர்.

717 **தர்ப்பஹா :** கோவர்த்தன மலையைக் குடையாகத் தாங்கி நின்றது பாரிஜாதாபஹரணம் செய்தது முதலான அற்புதச் செய்கைகளினால் இந்திரன் முதலானோருடைய கொழுப்பை யடக்கினவர்.

718 **தர்ப்பத :** அடியார்கள் தம்மைப் பரிபூர்ணாநுபவம் செய்யும்படியாக விருந்து 'எனக்காரும் நிகரில்லையே, எனக்கினியார் நிகர் நீணிலத்தே' என்று அவர்கள் களித்துப் பேசும்படி அவர்களுக்கு மதத்தை விளைவிப்பவர்.

719 **அத்ருப்த :** தம்முடைய செல்வச்சிறப்புகளால் தாம் கர்வமடையாதவர்.
'**த்ருப்த :** என்றும் பதவிபாகம் செய்வதுண்டு; யசோதையினாலும் நந்தகோபராலும் கொண்டாடப்பட்டு மகிழ்ந்திருப்பவரென்கை.

720 **துர்த்தர :** துஷ்டர்களால் பிடிக்க முடியாதவர் (அல்லது) பால்ய லீலைகளிலும் மதயானை போலத் தாய் தந்தையரால் பிடிக்க முடியாதவர்.

721 **அபராஜித :** தம் அடிபணிந்த பஞ்ச பாண்டவர்கள் தோல்வியடையாதபடி செய்தவர்.

722 **விச்வமூர்த்தி :** உலகங்களையெல்லாம் தமக்குச் சரீரமாக வுடையவர்.

723 **மஹாமூர்த்தி :** விச்வரூபங் காட்டினபோது பல பல பிரமாண்டங்களடங்கிய உலகமனைத்தும்

ஒரு மூலையில் அடங்கிக் கிடக்கும்படி பெரிய வுருவமெடுத்தவர்.

724 **தீப்தமூர்த்தி:** மிகவொளி பொருந்திய வஸ்துக்களை யெல்லாம் விசேஷித்துத் தமக்குச் சரீரமாக வுடையவர்.

725 **அமூர்த்திமாந்:** ரூபமற்றவைகளான மூலப்ரக்ருதி ஜீவாத்மா முதலானவற்றிற்கும் ஸ்வாமியாயிருப்பவர்.

726 **அநேகமூர்த்தி:** பல வடிவங்களைக் கொள்ள வல்லவர்.

727 **அவ்யக்த:** அவதாரகாலத்தில் தம் மஹிமை வெளிப்படாமலிருக்கப் பெற்றவர்.

728 **சதமூர்த்தி:** எண்ணிலா உருவங்களை யுடையவர்.

729 **சதாநந:** அநேக முகங்களை யுடையவர்.

730 **ஏக:** மஹிமையில் ஒப்பாரில்லாமையாலே அத்விதீயர்.

731 **நைக:** தமது விபூதிகளில் அனந்தமாகவுமிருப்பவர்.

732 **ஸ:** அப்படிப்பட்டவரென்று கொண்டாடத் தக்கவர்.

733 **வ:** எல்லாப் பிராணிகளிடத்திலும் வஸிப்பவர்.

734 **க:** எங்கும் பிரகாசித்துக் கொண்டிருப்பவர்.

735 **கிம்:** * அந்வேஷ்டவ்ய: என்று உபநிஷத்தில் கூறியபடி தேடத்தகுந்தவர்.

736 **யத்:** அடியார்களைக் காப்பதில் எப்போதும் யத்னமுடையவர்.

737 **தத்:** அன்பர்களுக்கு ஞான பக்திகளை வளர்ப்பவர்.

738 **பதம் அநுத்தமம்:** [அநுத்தமம் பதம்] தமக்கு மேல் ப்ராப்யமானது ஒன்றில்லாதபடி பரமப்ராப்யமானவர்.

739 **லோகபந்து:** * உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது * என்றபடி எல்லாரோடும் சாச்வதமான உறவு உடையவர்.

740 **லோகநாத:** உலகங்கட்கெல்லாம் ஸ்வாமியானவர்.

741 **மாதவ:** லக்ஷ்மீபதி.

742 **பக்தவத்ஸல:** பக்தர்களிடத்திலே மிகுந்த அன்பு உள்ளவர்.

743 **ஸுவர்ணவர்ண:** பொன்போல் மாசற்று விளங்கும் திவ்ய ஸ்வரூபமுள்ளவர்.

744 **ஹேமாங்க:** பொன்னிறமான திருவடிவமுள்ளவர்.

745 **வராங்க:** சிறந்த திவ்யமங்கள விக்ரஹமுடையவர்.

746 **சந்தநாங்கதீ** ஆனந்த மளிக்கும் திவ்ய பூஷணைங்களை யணிந்துள்ளவர்.

747 **வீரஹா** அஸுர வீரர்களை வேரோடு களைந்தவர்.

748 **விஷம:** துஷ்ட நிக்ரஹமும் சிஷ்ட பரிபாலனமும் செய்பவராதலால் இப்படிப்பட்ட வேற்றுமையுள்ளவர்.

749 **சூந்ய:** குற்றங்களெல்லாம் நீங்கினவர்.

750 **க்ருதாசீ:** தமது திருக் குணங்களினால் உலகத்தை உகப்பிப்பதில் விருப்பமுள்ளவர்.

751 **அசல:** ஆஸுர ப்ரக்ருதிகளினால் அசைக்கவு மொண்ணாதவர்.

752 **சல:** பாண்டவர்கள் முதலிய அடியார்களுக்காகத் தம்முடைய சொல்லையும் ப்ரதிஜ்ஞையையும் விட்டு விலகுகிறவர்.

753 **அமாநீ:** அடியார்கள் திறத்தில் தம் உயர்வை நினையாதவர்.

754 **மாநத:** தம்மைச் சார்ந்தவர்களுக்குக் கௌரவமளிப்பவர்.

755 **மாந்ய:** வெகுமானிக்கத்தக்கவர்.

756 **லோகஸ்வாமீ :** உலகங்களை யெல்லாம் தமது பொருளாக வுடையவர்.

757 **த்ரிலோகத்ருத் :** மூவுலகங்களையும் தாங்குபவர். (த்ரிலோகத்ருக் என்பதும் பாடம்.)

758 **ஸுமேதா :** நல்ல எண்ணமுள்ளவர்.

759 **மேதஜ :** வேள்வியின் பயனாகத் தோன்றியவர்.

760 **தந்ய :** அவதாரங்கள் செய்வதைப் பெருப் பெருக நினைப்பவர்.

761 **ஸத்ய மதோ :** அவதாரங்களில் காட்டுமவை உண்மையாக இருக்கப் பெற்றவர்.

762 **தராதர :** கோவர்த்தன மலையை யெடுத்தவர்.

763 **தேஜோவ்ருஷ :** அன்பர்களைக் காப்பதில் தமது சக்தியை மிகுதியாக வுபயோகிப்பவர்.

764 **த்யுதிதர :** அதிமாநுஷ திவ்ய சக்தியை யுடையவர்.

765 **ஸர்வசஸ்த்ரப்ருதாம்வர :** அஸ்த்ர சிக்ஷை பெற்றவர்களெல்லாரினும் சிறந்தவர்.

766 **ப்ரக்ரஹ :** அன்பர்களைத் தம் சொற்படி நடத்துபவர்.

767 **நிக்ரஹ :** எதிரிகளை அடக்குபவர்.

768 வ்யக்ர: ஆச்ரித விரோதிகளைத் தொலைப் பதில் பரபரப்புள்ளவர்.

769 நைகச்ருங்க: விரோதிகளைத் தொலைப்பதில் பல வகை யுபாயங்களை யுடையவர்.

770 கதாக்ரஜ: கதனென்னும் யாதவனுக்கு முன் பிறந்தவர்.

771 சதுர்மூர்த்தி: யதுகுலத்தில் அவதரித்தபோது பலபத்ரன், வாஸுதேவன், ப்ரத்யும்நன் அநி ருத்தன் என்னும் நான்கு மூர்த்திகள் கொண் டவர்.

772 சதுர்பாஹு: சதுர்புஜரூபத்துடனே தேவகி யின் வயிற்றில் நின்று தோன்றியவர்.

773 சதுர்வ்யூஹ: ஞானம் முதலிய ஆறு குணங்கள் வாஸுதேவ ரூபத்தில் ஸமமாக நிரம்பியும், மற்ற மூன்று ரூபங்களில் இரண்டிரண்டு தலை யெடுத்தும் இப்படி நான்கு வகையாக விளங்கு பவர்.

774 சதுர்கதி: இந்திரபதம் ப்ரஹ்மபதம் கைவல் யம் மோக்ஷம் என்கிற நால்வகைக் கதிகளைக் கொடுப்பவர்.

775 சதுராத்மா: ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி, துரீயம் என்னும் நான்கு நிலைமைகளிலும் நான்கு உருவங்களாக விளங்குமவர்.

776 **சதுர்ப்பாவ :** வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த மூர்த்திகளில் லோகஸ்ருஷ்டி சாஸ்த்ரப்ரதானம் முதலிய நான்கு பிரயோஜனங்களை வெளிப்படுத்துமவர்.

777 **சதுர்வேதவித் :** நான்கு வேதங்களையு மறிந்தவர்களுக்கும் தமது பெருமைக் கடலில் சிறிதளவே தெரியும்படி யிருப்பவர்.

778 **ஏகபாத் :** தம்முடைய பாகங்களுள் ஒரு பாகத்தினால் அவதரிப்பவர்.

779 **ஸமாவர்த்த :** இவ்வுலகில் பல முறை திரும்பித் திரும்பி அவதாரங்கள் செய்துகொண்டிருப்பவர்.

780 **நிவ்ருத்தாத்மா :** தயையினால் உலகத்தோடு சேர்ந்திருந்தாலும் இயற்கையில் ஒன்றிலும் சேராத தனித்த மனமுள்ளவர்.

781 **துர்ஜய :** ஒருவராலும் வசப்படுத்தவும் காணவும் கூடாதவர்.

782 **துரதிக்ரம :** தம்முடைய திருவடிகளே உலகுக்குப் புகலாயிருப்பதனால் யாரும் அந்தத் திருவடிகளைக் கடக்க முடியாதபடி யிருப்பவர்.

783 **துர்லப :** ஜிதேந்திரியர்களல்லாதவர்களுக்கு எட்டாதவர்.

784 **துர்கம :** அடைவதற்கு அருமையானவர்.

775 **துர்க:** அவித்யை முதலான மறைவுகள் கோட்டைபோலச் சூழ்ந்து கொண்டிருப்பதனால் பிரவேசிக்கக் கூடாமலிருப்பவர்.

786 **துராவாஸ:** தம் இருப்பிடம் யாவர்க்கும் எட்டாததாக இருப்பவர்.

787 **துராரிஹா:** [இது முதல் 810 நாமம் வரை புத்தாவதாரம் கூறப்படுகிறது.]

* கள்ள வேடத்தைக்கொண்டுபோய்ப் புறம் புக்கவாறும் * என்று சொல்லப்பட்ட புத்தாவதாரத்தில் கெட்டவழியிற் செல்லுகிறவர்களை வேதமார்க்கத்தை விடுவிப்பது முதலான பலவுபாயங்களினால் கெடுத்தவர்.

788 **சுபாங்க;** அஸுரர்கள் நம்பி மயங்கும்படி மாயையினால் அழகிய உருவங்கொண்டவர்.

789 **லோகஸாரங்க:** புத்தாவதாரத்தில் அஸுரர்களை வஞ்சிக்கத்தக்க வுபாயமறிந்தவர்—உலகத்தோர் சிலாகிக்கத் தக்கதாக யுக்திகளுக்கு ஒற்றுமையான போக மோக்ஷங்கள் இரண்டு மார்க்கங்களையும் அறிந்து உபதேசித்தவர்.

790 **ஸுதந்து:** சாந்த வேஷம் முதலியவற்றை ஏறிட்டுக் காண்பிப்பதாகிய அஸுரவசிகார வலையை யாரும் தாண்ட முடியாத வுறுதியுள்ளதாகும்படி வைத்திருப்பவர்.

791 **தந்துவர்த்தந :** பாப பாசங்களென்னும் சிறு நூலிழைகளினுல் ஸம்ஸார மென்னுங் கயிற் றைப் பெருகச் செய்கிறவர்.

792 **இந்த்ரகர்மா :** இந்திரன் முதலிய தேவர்களின் வேண்டுகோளுக்கிரங்கிக் காரியஞ் செய்தவர்.

793 **மஹாகர்மா :** மஹத்தான காரியஞ்செய்தவர்.

794 **க்ருதகர்மா :** அஸுரர்கள் ஏமாந்துபோவதற் காகவே அவர்களின் நாஸ்திகாசாரங்களைத் தாமும் ஆதரித்தவர்.

795 **க்ருதாகம :** அவ்வநுஷ்டானத்தை ஸ்திரப்படுத் துவதற்காகப் புத்தாகமம், ஜைநாகமம் முத லிய சமய நூல்களைச் செய்தவர்.

796 **உத்பவ :** மோக்ஷத்தை உபதேசிப்பதாக வெளி யில் காண்பிப்பதனுல் ஸம்ஸாரத்தைக் கடந் தவர் போல இருப்பவர்.

797 **ஸுந்தர :** அஸுரர்களின் கண்களைக்கவரும் அழகியவுருவமுள்ளவர்.

798 **ஸுந்த :** வடிவழகினுல் அஸுரர்களின் மனங் களை நன்ருக மெதுப்படுத்துகிறவர்.

799 **ரத்நநாப :** புத்தாவதாரத்தில் புலமையை நடிப் பதற்காக வயிற்றைத் தடவுவதினுல் ரத்னம் போல் அழகாக விளங்கும் நாபியையுடையவர்.

800 **ஸுலோசந :** அழகிய கண்களை யுடையவர்.

ஸஹஸ்ரநாமத்தில் எட்டாவது நூறு முற்றிற்று.

---

## ஒன்பதாவது நூறு

801 **அர்க்க:** மஹாத்மா வென்றும் மிக்க தர்மிஷ்டரென்றும் (பௌத்தாவதாரத்தில் அசுரர்களால்) துதிக்கப்பெற்றவர்.

802 **வாஜஸநி:** (பௌத்தாவதாரத்தில்) நாஸ்திக வாதம் செய்து இம்மைக்குரிய சோற்றிலேயே ருசியை விளைவித்தவர்.

803 **ச்ருங்கீ:** அஹிம்ஸா விரதத்தைக் கொள்விப்பதற்காகக் கொம்புபோல் மயில் தோகையைக் கையில் வைத்திருப்பவர்.

804 **ஜயந்த:** (புத்தாவதாரத்தில்) நாஸ்திக வாதத்தைப் பரப்பி ஆஸ்திகமதம் பேசுகிறவர்களை வென்றவர்.

805 **ஸர்வவிஜ்ஜயீ:** எல்லா மறிந்தவர்களையும் வெல்லுந் திறமையுள்ளவர்.

806 **ஸுவர்ணபிந்து:** புத்தாவதாரத்தில் ஸர்வசக்தியுள்ளவராதலால் ஸர்வஜ்ஞர்களையும் ஜயிக்குந் திறமையினால் எழுத்துகளும் சொற்களும் சுத்தமுள்ள உறுதியான பேச்சினால் ஆஸ்திக வாதத்தைக் கண்டிப்பவர்.

807 **அக்ஷோப்ய:** ஆழ்ந்த கருத்துள்ளவராதலால் யாராலும் கலக்க முடியாதவர்.

808 **ஸர்வவாகீச்வரேச்வர :** பேசுந்திறமை யுள்ளவர் களெல்லாரினுள்ளும் மேம்பட்டவர்.

809 **மஹாஹ்ரத :** * வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித் தடம் * என்று நம்மாழ் வாரருளிச் செய்தபடியே பெரிய தடாகம் போன்றிருப்பவர்.

810 **மஹாகர்த்த :** புத்தாவதாரத்தில் தாம் செய்த நாஸ்திக வாதங்களினால் ஆத்மா கெட்டுப் போனவர்களை ரௌரவாதி நரகங்களென்னும் குழிகளில் விழ்த்துமவர்.

811 **மஹாபூத :** மேலோர்களை அன்பராகக் கொண் டவர்.

812 **மஹாநிதி :** அந்த மஹாத்மாக்களை நிதி கண்டது போல அன்புடன் ஆதரிப்பவர்.

813 **குமுத :** இக்கிலவுலகத்தில் வாழ்வதில் மிக்க மகிழ்ச்சி கொண்டவர்.

814 **குந்தர :** 'கும்' என்னப்படும் பாவத்தைப் போக்குமவர்.

815 ॥ **குந்த :** அழிக்கப்பட்ட பாவம் திரும்பி அணு காமலிருக்கும்படி போக்குமவர்.

816 **பர்ஜந்ய :** தாபத்ரயத்தைப் போக்கும் விஷயத் தில் மேகமாயிருப்பவர். [அடியார்களைக் குளிரச் செய்பவர்.]

817 பவந : தாமே பக்தர்களிடம் செல்பவர்.

818 அநில : பக்தர்களை யநுக்ரஹிப்பதில் தம்மைத் தூண்டுகிறவர் வேண்டாதவர்.

819 அம்ருதாச : பக்தர்களுக்குத் தமது திருக்குணங் களாகிற அமுதத்தை யூட்டுகிறவர்.

820 அம்ருதவபுः அமுதம்போல் இனிய திருமேனியை யுடையவர்.

821 ஸர்வஜ்ஞ : முற்று முணர்ந்தவர்.

822 ஸர்வதோமுக : பக்தர்கள் தம்மை யடைவதற்கு இன்னதுதான் வழியென்று ஒரு நியம மின் றிக்கே எந்த வழியையும் வியாஜமாகக் கொண்டு அடையக்கூடியவர்.

823 ஸுலப : எளிமைக் குணமுள்ளவர்.

824 ஸுவ்ரத : * ஸக்ருதேவப்ரபந்நாய...ஏதத் வ்ர தம் மம * என்பது முதலியவற்றில் தெரிவிக் கப்பட்ட [சரணுகதர்களை யொருகாலும் கை விடாமை யாகிற] சிறந்த விரதமுடையவர்.

825 ஸித்த : பக்தர்களுக்கு இனி ஸாதிக்கவேண்டா மல் ஏற்கெனவே ஸித்தராகவுள்ளவர்.

(இதுவரையில் நேராகவுள்ள அவதாரங்களைத் தெரிவிக்கும் திருநாமங்கள் ஓதப்பட்டன ; இனி தமது அநுப்பிரவேசத்தினுல் சிறப்புற்றவர்கள் மூலமாக

லோகரக்ஷணம் செய்தபடியைத் தெரிவிக்கும் திரு நாமங்கள் ஓதப்படுகின்றன.)

826 **சத்ருஜித்சத்ருதாபந:** தமது திவ்ய சக்தியினுல் பூரிக்கப்பட்டுப் பகைவர்களை வென்றவர்களாகிய கருத்ஸ்தர் முதலியோர்களைக் கொண்டு பகைவரை வருத்துகின்றவர்.

827 **ந்யக்ரோதோதும்பர:** [ந்யக்ரோத—உத்—அம்பர: என்று பிரிவு காணவேணும்: உத அம்பர:—உதும்பர: என்றனது ஆர்ஷஸந்தி.] கீழே நின்று வணங்கிக் கை கூப்புகிறவர்கள் தங்களை நோக்கி அநுக்ரஹிக்கும்படி.......... தடுத்து நிறுத்தப்படுகிறவராகவும், உயர்ந்த பரமபதத்தை யடைந்தவராகவுமிருப்பவர்.

(இனி தமது அங்கத்தினராகிய அந்தத் தேவர்களைக் கொண்டு உலகத்தை நடத்துவது கூறப்படுகிறது).

828 **அச்வத்த:** 'இன்றிருப்பது நாளையிராது' என்னும்படி அநித்யமான பதங்கள் பெற்ற இந்திரன் ஸூர்யன் முதலியவர்களுள் அநுப்ரவேசித்து எல்லாவற்றையும் நடத்துகிறவர். அ-ச்வ:—ஸ்த என்று பகுப்பது.

829 **சாணூராந்த்ர நிஷூதந:** தேவர்களுக்கும் உலகங்களுக்கும் விரோதியான சாணூரனெனப்படும் அந்திரனுகிய மல்லனை முடித்தவர்.

830 **ஸஹஸ்ரார்ச்சி :** எண்ணிறந்த கிரணங்களை யுடையவர்.

831 **ஸப்தஜிஹ்வ :** காளீ கராளீ முதலான ஏழு நாக்குக்களை யுடைய அக்நியின் வடிவானவர்.

832 **ஸப்தைதா :** ஔபாஸனம் முதலிய ஏழு வகை வைதிக க்ரியைகளினால் ஆராதிக்கப்படுபவர்.

833 **ஸப்தவாஹந :** காயத்ரி முதலிய ஏழு சந்தஸ்ஸுக்களை ஏழு குதிரைகளாகவுடைய ஸூர்யனை நடத்துகிறவர்.

834 **அமூர்த்தி :** பஞ்ச பூதமயமான ரூபத்தைக் காட்டிலும் வேறுபட்ட அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹ முடையவர்.

835 **அநக :** கருமங்களுக்கு வசப்பட்ட ஜீவாத்மாக்களைக் காட்டிலும் விலக்ஷணரானவர்.

836 **அசிந்த்ய :** எப்படிப்பட்ட உயர்ந்த வஸ்துக்களையும் தமக்கு உவமையாக நினைக்கவும் தகாதவர்.

**பயக்ருத் :** தமது கட்டளையைக் கடந்தவர்களுக்கு அச்சத்தை யுண்டாக்குபவர்.

838 **பயநாசந :** தமது கட்டளையில் நிற்பவர்களுக்கு அச்சத்தை யொழிப்பவர். [இனி அணிமா முதலிய அஷ்டைச்வரியங்கள் கூறப்படுகின்றன.]

839 **அணு :** மிகச் சிறிதான ஹ்ருதயாகாசத்திலுள்ள டங்கி அதிலும் சிறியனான ஜீவாத்மாவினுள்

ளும் பிரவேசிக்குந் திறமையினால் அணிமா வென்னும் ஐச்வர்யம் பெற்றவராதலால் மிக நுண்ணியவர்.

840 **ப்ருஹத்:** மஹிமா என்னும் ஐச்வர்ய முள்ள வர்.

841 **க்ருச:** லகிமா என்னும் ஐச்வர்ய முள்ளவர். (பஞ்சினும் காற்றினும் மிக லேசாயிருப் பவர்.)

842 **ஸ்தூல:** பருத்திருப்பவர். (ஓரிடத்திலிருந்தே எல்லாப் பொருள்களையும் நேரில் தொடத்தகுந் தவர். இதனால் ப்ராப்தியென்னு மைச்வரியம் சொல்லிற்று.)

843 **குணப்ருத்:** தம் ஸங்கல்பத்தினால் எல்லா நிலை மைகளிலுமிருக்கும் எல்லாப் பொருள்களையும் தமது குணம் போலத் தம்மிடம் வைத்துத் தாங்குகிறவர். (இதனால் எல்லாம் உட்பட் டிருப்பதாகிய ஈசித்வமென்னும் ஐச்வர்யம் சொல்லிற்று.)

844 **நிர்குண:** ப்ராக்ருத குணங்களொன்றும் தம் மிடம் பற்றாமலிருப்பவர். (இதனால் ஒன்றுக்கு முட்படாமலிருக்கும் வசித்வமென்னும் ஐச்வர் யம் சொல்லிற்று.)

845 **மஹாந்:** எல்லாவற்றிலும் மிகச் சிறந்தவர். (இதனால் நினைத்தவெல்லாம் தடைபடாமலி

ருப்பதாகிய ப்ராகாம்ய மென்னும் ஐச்வர்யம் சொல்லிற்று.)

846 **அத்ருத :** இப்படிப்பட்ட விச்வருபமாயிருக்கும் மேன்மையினுல் ஒன்றிலும் கட்டுப்படாதிருப்பவர்.

847 **ஸ்வத்ருத :** தம்மாலேயே தாம் தாங்கப்படுகிறவர்.

848 **ஸ்வாஸ்ய :** எப்போதும் சிறந்ததான இருப்பையுடையவர்.

849 **ப்ராக் வம்ச :** ஆதிகாலம் தொடங்கி நித்ய வஸ்துக்களாயுள்ளவைகளுக்கும் நித்யாதாரமாக இருப்பவர்.

850 **வம்ச வர்த்தந :** வம்சமெனப்படும் நித்யஸூரி வர்க்கத்தை மேன்மேலும் மகிழச்செய்பவர்.

851 **பாரப்ருத் :** சேதநர்களின் யோக க்ஷேமநிர்வாஹப் பொறுப்பைத் தாங்குபவர்.

852 **கதித:** ஸகல கல்யாண குணபரிபூர்ணராக ஸகல சாஸ்த்ரங்களிலும் சொல்லப்பட்டவர்.

853 **யோகீ:** அகடிதகடநாஸாமர்த்தியமாகிற ப்ரபாவம் பொருந்தியவர்.

854 **யோகீச :** ஸநக ஸநந்தநாதி யோகிகளின் யோகத்தை நிறைவேற்றுகிறவர்.

855 **ஸர்வகாமத :** யோகங்களில் தவறினவர்களுக்கும் அணிமா முதலான ஐச்வரியங்களை யோகத்தின் பலனைக் கொடுப்பவர்.

856 **ஆச்ரம :** சிரமங்களை ஆற்றுகிறவர்.

857 **ச்ரமண :** முன் ஜன்மத்தில் தொட்ட யோகத்தை மறு ஜன்மத்தில் எளிதாக அப்யஸிக்கும் படி செய்பவர்.

858 **க்ஷாம :** யோகப்ரஷ்டர்களும் தம்மை த்யானஞ் செய்யத் தொடங்கினவுடன் அவர்களை முக்தராம்படி செய்யவல்லவர்.

859 **ஸுபர்ண :** ஸம்ஸாரக் கடலின் கரை சேர்ப்பவர்.

860 **வாயுவாஹந :** கீழே விழுந்தவர்களையும் மேலே தூக்கி விடுகிறவர்.

861 **தநுர்த்தர :** சார்ங்க மென்னும் வில்லாண்டான்.

862 **தநுர்வேத :** வில் வித்தைக்குத் தாமே ப்ரவர்த்தகர்.

863 **தண்ட :** அரசர்கள் மூலமாக தண்டனையைச் செலுத்துபவர்.

864 **தமயிதா :** தாமே நேராகவும் ராவணன் போல்வாரைத் தண்டிப்பவர்.

865 **அதம :** தாம் யாராலும் அடக்கப்படாதவர்.

866 **அபராஜித:** தமது கட்டளை எவ்விடத்திலும் எக்காலத்திலும் எதனாலும் தடைபடாதவர்.

867 **ஸர்வஸஹ:** தேவர்கள் முதலான எல்லாரையும் தாமே தாங்குபவர்.

868 **நியந்தா:** பல தேவதைகளிடம் பக்தி வைத்திருக்கின்ற பலரையும் அவரவர் விருப்பப்படி தாமே நடத்துகிறவர்.

869 **நியம:** தேவதாந்தரங்கள் மூலமாகவும் அவரவர்களுக்குப் பலன்களைத் தாமே கொடுப்பவர்.

870 **யம:** தேவர்களுக்கும் அதிகாரங் கொடுத்து நடத்துகிறவர்.

871 **ஸத்வவாக்:** சுத்தஸத்வ குணத்தை யடைந்திருப்பவர்.

872 **ஸாத்விக:** ஸத்வகுணத்தின் பலன்களை யளிக்க வல்லவர். [தர்மம், ஞானம், வைராக்யம் இவை ஸத்வகுணத்தின் பலன்கள்.]

873 **ஸத்ய:** ஸத்தியத்தில் நிலைபெற்றவர்.

874 **ஸத்யதர்ம பராயண:** ஸாத்விகர்களால் செய்யப்படும் தருமங்களை அன்போடு ஏற்றுக்கொள்பவர்.

875 **அபிப்ராய:** ஸாத்விகர்களால் தாமே பரமப்ரயோஜனமாக நினைக்கப்படுபவர்.

876 **ப்ரியார்ஹ:** ப்ரியர்களான ஞானிகளை அநுக்ர ஹிப்பதற்கு உரியவர்.

877 **அர்ஹ:** ஞானிகளுக்குத் தாம் ஒருவரே தகுதி யாயிருப்பவர்.

878 **ப்ரியக்ருத்:** இதர பலன்களை விரும்புமவர்களும் முடிவில் தம்மையே விரும்பும்படி செய்பவர்.

879 **ப்ரீதிவர்த்தந:** பக்தர்களின் பக்தியை அதிகப் படுத்துகிறவர்.

880 **விஹாயஸகதி:** பக்தர்களின் பரமபத ப்ராப் திக்கும் தாமே உபாயமாயிருப்பவர்.

881 **ஜ்யோதி:** அர்ச்சிராதி மார்க்கத்தில் தாமே முதற்படியான ஒளியாயிருப்பவர்.

882 **ஸுருசி:** அர்ச்சிராதி மார்க்கத்தில் இரண்டா வதுபடியான பகலாகவும் தாமே யிருப்பவர்.

883 **ஹுதபுக்விபு:** அமிருதமாகப் பரிணமிக்கும் ஹோம திரவியங்களை புஜிக்கின்ற சந்திரன் வளர்வதாகிய வளர்பிறையாயிருப்பவர். [சுக்லபக்ஷம் அர்ச்சிராதி மார்க்கத்தில் மூன் றும்படி.]

884 **ரவி:** ஸூரியன் மேலேறிப் பிரகாசிப்பதனுல் சிறந்ததாகச் சொல்லப்படுகிற உத்தராயண மாக இருப்பவர். [உத்தராயணம் அர்ச்சிராதி மார்க்கத்தில் நான்காம்படி.]

885 **விரோசந:** உத்தராயணம் தக்ஷிணாயனம் என்கிற இரண்டு மார்க்கங்களினால் ரதம் சென்று ஸூர்யன் ப்ரகாசிக்க நின்ற ஸம்வத்ஸரமாக இருப்பவர். [இது அர்ச்சிராதி மார்க்கத்தில் ஐந்தாம்படி.]

886 **ஸூர்ய:** வாயு ஸஞ்சரிப்பதற்கிடமான வாயு லோகமாக வுள்ளவர். [வாயு அர்ச்சிராதி மார்க்கத்தில் ஆறும்படி.]

887 **ஸவிதா:** ஸூர்யனால் மழையையும் அதனால் பயிர் முதலியவற்றையும் உண்டாக்குகிறவர். [ஸூர்யன் அர்ச்சிராதி மார்க்கத்தில் ஏழாவது படி.]

888 **ரவிலோசந:** ஸூர்யனால் சந்திரனையும் மின்னலையும் வருணனையும் விளங்கச் செய்பவர். [ஸூர்ய கிரணங்கள் பிரவேசிப்பதனாலே தான் சந்திரன் முதலானவர்கள் பிரகாசிப்பது. இதனால், அர்ச்சிராதி மார்க்கத்தில் 8, 9, 10-வது படிகளாகிய சந்திரன் மின்னல் வருணன் இவர்கள் கூறப்பட்டார்கள்.]

889 **அநந்த ஹுதபுக் போக்தா:** அளவற்ற மஹிமையுள்ள இந்திரனையும் பிரமனையும் வைத்திருப்பவர். [அர்ச்சிராதி மார்க்கத்தில் இந்திரன் பதினோராவது படியாகவும் பிரமன் பன்னிரண்டாவது படியாகவும் கூறப்பட்டவர்கள்.]

890 **ஸுகத:** அமானவனென்னும் திவ்ய புருஷன் தொடுவதனால் ஸம்ஸாரமும் ஸம்ஸார வாஸனை

களும் சேஷமின்றி அகன்ற பிறகு தம்மை அடைவதாகிய ஸுகத்தைக் கொடுப்பவர். (இந்த அமானவன் அர்ச்சிராதி மார்க்கத்தில் அடுத்த பதின்மூன்றும்படி.)

891 **நைகத:** எண்ணிறந்த பூமாலைகள் அஞ்சனங்கள் பீதாம்பரங்கள் முதலிய ப்ரஹ்மாலங்காரங்களைக் கொடுக்கும் அப்ஸரஸ்ஸுக்கள் இந்த முக்தனை யெதிர்கொண்டழைத்துத் தம்மிடம் சேர்க்கும்படி செய்பவர்.

892 **அக்ரஜ:** இப்படி வந்தடைந்த முக்தர்கள் அனுபவித்து மகிழும்படி பர்யங்க வித்தையிம் சொன்னது போல எல்லா ஐச்வர்யங்களால் நிரம்பி மிகவின்பமாக எதிரில் விளங்குமவர்.

893 **அநிர்விண்ண:** இப்படி சேதநன் முக்தியடைந்த பின்பு தாம் கவலை தீர்ந்திருப்பவர்.

894 **ஸதாமர்ஷீ:** எக்காலமும் தமக்கு முக்தன் செய்யும் கைங்கரியங்களை ஏற்றுக் கொண்டிருப்பவர்.

895 **லோகாதிஷ்டாநம்:** மேலுலகங்களுக் கெல்லாம் ஆதாரமாயிருப்பவர்.

896 **அத்புத:** காணாதது கண்டதுபோல் ஆச்சரியப் படத் தகுந்தவர். [**அத்புதம்** என்றும் பாடமுண்டு.]

897 **ஸநாத்:** முக்தர்களால் பங்கு போட்டுக் கொண்டு அனுபவிக்கப்படுகிறவர்.

898 **ஸ்நாதநதம:** எக்காலமும் இருப்பவராயினும் அப்பொழுதைக்கப்பொழுது ஆராவமுதாக அனுபவிக்கத்தக்கவர்.

899 **கபில:** மின்னலின் நடுவில் விளங்கும் காள மேகம் போல நித்ய விபூதியின் நடுவில் விளங்கு பவர்.

900 **கபிரவ்யய:** (அவ்யய:) கபி: மாறுதலொன்று மில்லாத நித்யஸுகத்தைக் காப்பாற்றி யனு பவிப்பவர்.

ஸஹஸ்ரநாமத்தில் ஒன்பதாவது நூறு முற்றிற்று.

---

## பத்தாவது நூறு

901 **ஸ்வஸ்தித:** மஹாமங்களத்தைக் கொடுப்பவர்.

902 **ஸ்வஸ்திக்ருத்:** தம்மைக் குணங்களோடுகூட அநுபவிக்கும்படியாக முக்தர்களுக்கு ஆசிர் வாதம் செய்பவர்.

903 **ஸ்வஸ்தி:** தாமே மங்கள மூர்த்தியாயிருப்பவர்.

904 **ஸ்வஸ்திபுக்:** எல்லா மங்களங்களையும் அழியா மல் காப்பவர்.

905 **ஸ்வஸ்திதக்ஷிண:** தன் அடியார்களுக்குத் தமக்கு கைங்கரியம் செய்யத் தகுதியாம் திவ்ய

சரீரம் சக்தி முதலிய பல நன்மைகளையும் தக்ஷிணையாக அளிப்பவர்.

906 **அரௌத்ர:** கல்யாண குணக் குளிர்ச்சியினால் ஸௌம்யராக இருப்பவர்.

907 **குண்டலீ:** குண்டலம் முதலிய திவ்ய பூஷணங்களை எக்காலமும் அணிந்திருப்பவர்.

908 **சக்ரீ:** திருவாழி முதலிய திவ்யாயுதங்களைத் தரிப்பவர்.

909 **விக்ரமீ:** சிறந்த திவ்யசேஷ்டிதங்களை யுடையவர்.

910 **ஊர்ஜிதசாஸந:** நிலை நின்ற கட்டளையை யுடையவர்.

911 **சப்தாதிக:** வேதவாக்குகளுக்கும் எட்டாதவர்.

912 **சப்தஸஹ:** (இது முதல் 945-ஆம் திருநாமம் வரை கஜேந்திர மோக்ஷாநுபவம்.) கஜேந்திராழ்வான் முதலையின் வாயிலகப்பட்டு மூலமே யென்று கதறின சொல்லை வருத்தத்தோடு கேட்டவர்.

913 **சிசிர:** கஜேந்திரனது ஆர்த்தநாதம் கேட்டவுடனே விரைந்து சென்றவர்.

914 **சர்வரீகர:** அப்போது கஜேந்திர ரக்ஷணத்திற்காகப் பஞ்சாயுதங்களையும் கையில் கொண்டவர்.

915 **அக்ரூர :** மிகுந்த ஈர நெஞ்சு உள்ளவர்.

916 **பேசல :** கஜேந்திரனைக் காப்பாற்றுவதிலுண்டான வேகத்தில் மாலைகளும் ஆடையாபரணங்களும் கலைந்திருப்பதே ஓர் அழகிய நிலையாக இருக்கப் பெற்றவர்.

917 **தக்ஷ :** கஜேந்திரனைக் காக்க விரைவாக வந்திருப்பவர்.

918 **தக்ஷிண :** இன்சொற்களினால் கஜேந்திரனைத் தேற்றி அன்பு பராட்டினவர்.

919 **க்ஷமிணாம்வர :** பொறுமையார்களில் தலைவர்.

920 **வித்வத்தம :** கஜேந்திரனது உட்கருத்தை அறியவல்லவர்.

921 **வீதபய :** கஜேந்திரனது பயத்தைக் கெடுத்தவர்.

922 **புண்யச்ரவணகீர்த்தந :** கஜேந்திரமோக்ஷ கதையைக் கேட்பதனாலும் சொல்வதனாலும் பக்தர் புனிதராம்படி யிருப்பவர்.

923 **உத்தாரண :** கஜேந்திரனைக் கரையேற்றினவர்.

924 **துஷ்க்ருதிஹா :** கஜேந்திரனுக்குத் தீங்குசெய்த பாவியாகிய முதலையைக் கொன்றவர்.

925 **புண்ய :** நம் போன்றவர்களின் பாவங்களையும் விலக்குபவர்.

926 **துஸ்ஸவப்ந நாசந:** கெட்ட கனவுகளின் பலன் விளையாதபடி தடுப்பவர். [கஜேந்திர மோக்ஷ கதாச்ரவணத்திற்கு இது பலனாகச் சொல்லப் பட்டிருக்கிறது.]

927 **வீரஹா:** கஜேந்திரனுக்கு விரோதியான மிருத்யுவைத் தடுத்தவர்.

928 **ரக்ஷண:** கஜேந்திரனைக் காப்பாற்றினவர்.

929 **ஸந்த:** தம்மையடுத்தவர்களுக்குத் தாம் உளராயிருப்பவர்.

930 **ஜீவந:** கஜேந்திரனைப் பிடித்த முதலையையும் சாப மோக்ஷம் பெறுவித்தவர். (ஜீவனம் என்றும் பாடமுண்டு.)

931 **பர்யவஸ்தித:** அன்பினால் கஜேந்திரனைச் சுற்றி நின்றவர்.

932 **அநந்தரூப:** பக்தர்களைக் காத்தருள எண்ணிறந்த வடிவுகளைக் கொள்பவர்.

933 **அநந்தஸ்ரீ:** அளவற்ற செல்வங்களை ஆச்ரிதர்களுக்காக வைத்திருப்பவர்.

934 **ஜிதமந்யு:** கோபத்தை வென்றவர். [வேண்டிய போது கோபத்தை வரவழைத்துக் கொள்ள வல்லவரென்றபடி.]

935 **பயாபஹ:** அடியார்களின் அச்சத்தை அகற்றுபவர்.

936 **சதுரச்ர:** பக்தர்களின் காரியங்களைப் பழுதில்லாமல் செய்யவல்லவர்.

937 **கபீராத்மா:** பிரமன் முதலிய தேவர்களும் ஆழங் கண்டறிய முடியாத ஸ்வரூபமுள்ளவர்.

938 **விதிச:** துதிப்பவர்களின் தோத்திரங்களுக்கு எட்டாதவர்.

939 **வ்யாதிச:** அவரவர் விரும்பும் பல பலன்களையும் அளிப்பவர்.

940 **திச:** பிரமன் முதலிய தேவர்களை அவரவர்களது காரியங்களில் நியமிப்பவர்.

941 **அநாதி:** பிரமன் முதலிய தேவர்களாலும் ஸ்வாமியாக அறியப்படாதவர்.

942 **பூர்ப்புவ:** அடிமையறிவினால் கடைத்தேறின பக்தனுக்குத் தாமே இடமாயிருப்பவர்.

943 **லக்ஷ்மீ:** அடியார்களுக்கு எல்லா வகையான செல்வமும் தாமேயாயிருப்பவர்.

944 **ஸுவீர:** பக்தர்களின் ஆபத்துக்களைப் பரிஹரிக்கவல்ல சிறந்த சக்தியுள்ளவர்.

945 **ருசிராங்கத:** தமது அழகிய திருமேனியை யனுபவிக்கும்படி கஜேந்திராழ்வானுக்குக் கொடுத்தவர்.

946 **ஜநந:** ஆத்மாக்களுக்குக் கரண களேபரங்களைக் கொடுத்து ஜநிக்கும்படி செய்பவர்.

947 **ஜநஜந்மாதி :** ஜனங்களின் பிறப்புக்குத் தாமே பலனாயிருப்பவர். [தம்மை யநுபவிப்பதற்காகவே ஜனங்களைப் பிறப்பிக்குமவரென்றபடி.]

948 **பீம :** தம்மை யநுபவியாதவர்களுக்கு கர்ப்ப வாஸம் நரகம் முதலிய துன்பங்களையும் தந்து அச்சமுறுத்துகிறவர்.

949 **பீமபராக்ரம :** ஹிரண்யராவணாதிகளுக்கு பயங்கரமான பராக்ரமத்தை யுடையவர்.

950 **ஆதார நிலய :** உலகுக்கு ஆதார பூதர்களான ப்ரஹ்லாதவிபீஷணாதிகளுக்குத் தாம் ஆதாரமாயிருப்பவர்.

951 **தாதா :** உபதேசங்களாலும் அனுஷ்டானங்களாலும் உலகத்தைத் தாங்குபவர்.

952 **புஷ்பஹாஸ :** புஷ்பத்தின் மலர்ச்சி போன்ற ஸௌகுமார்ய முடையவர்.

953 **ப்ரஜாகர :** இரவும் பகலும் ஆச்ரித ரக்ஷணத்தில் ஜாகரூகராக [கண்ணுறங்காதவராக] இருப்பவர்.

954 **ஊர்த்வக :** எல்லாவற்றிலும் உயர்ந்தவர்.

955 **ஸத்பதாசார :** தமக்கு அடிமை செய்வதாகிற நன்மார்க்கத்தில் அன்பர்களை நடத்துபவர்.

956 **ப்ராணத :** விஷயாந்தரப் பற்றினால் ஆத்மநாச மடைந்தவர்களுக்கு ஆத்மோஜ்ஜீவனம் செய்விப்பவர்.

957 ப்ரணவ: ஓங்காரஸ்வரூபியானவர்.

958 பண: தாம் சேஷி, பிறர் சேஷபூதர் என்கிற முறையை மாறுடுவதும் செய்பவர். [பக்தர் களுக்குத் தாம் அடிமைப்பட்டிருப்பவர்.]

959 ப்ரமாணம்: தத்வார்த்தங்களை நன்கு அறிவிப் பவர்.

960 ப்ராணநிலய: எல்லா ஆத்மாக்களும் தம்மிடம் அடங்கும்படி யிருப்பவர்.

961 ப்ராணத்ருத்: ஜீவராசிகளைத் தாய்போலப் போஷிப்பவர்.

962 ப்ராணஜீவந: ஆத்மாக்களுக்குத் தாமே உண வாயிருந்து பிழைப்பவர்.

963 தத்வம்: பிரபஞ்சத்தில் தாமே ஸாராம்சமாக இருப்பவர்.

964 தத்வவித்: தமது உண்மையைத் தாமே அறிந் திருப்பவர்.

965 ஏகாத்மா: தாமொருவரே சேஷியாயிருப்பவர்.

966 ஜந்மம்ருத்யுஜராதிக: பிறப்பிறப்பு மூப்புகளைக் கடந்தவர்.

967 பூர்ப்புவஸ்வஸ்தரு: மூவுலகங்களிலுமுள்ள பிராணிகளுக்குத் தாமே விருக்ஷம் போன்று தாரகமாயிருப்பவர்.

968 **தார :** ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவிப்பவர்.

969 **ஸவிதா :** எல்லாவற்றையும் தாமே உண்டாக்கு கிறவர்.

970 **ப்ரபிதாமஹ :** பிரமனுக்கும் தந்தையாகவுள்ள வர்.

971 **யஜ்ஞ :** யஜ்ஞம்செய்ய சக்தியற்றவர்களுக்குத் தாமே யஜ்ஞமாக இருப்பவர்.

972 **யஜ்ஞபதி :** தம் ஆராதனத்திற்குப் பலனையளிப் பவர்.

973 **யஜ்வா :** யாகம் செய்பவரும் தாமேயாக இருப் பவர்.

974 **யஜ்ஞாங்க :** பிறர் செய்யும் யாகங்களெல்லாம் தாம் செய்யும் யாகத்திற்குக் கீழ்ப்பட்டதாம் படி செய்பவர்.

975 **யஜ்ஞவாஹந :** யஜ்ஞங்களை நிரவஹிப்பவர்.

976 **யஜ்ஞப்ருத் :** யஜ்ஞங்களில் குறை நேர்ந்தாலும் தாமே அதை நிரம்பச் செய்பவர்.

977 **யஜ்ஞக்ருத் :** உலகங்களின் நன்மைக்காக ஆதி யில் யஜ்ஞங்களையும் படைத்தவர்.

978 **யஜ்ஞீ :** எல்லா யஜ்ஞங்களாலும் தாமே ஆரா திக்கப் படுபவர்.

979 **யஜ்ஞபுக் :** யஜ்ஞங்களுக்கு நேரும் இடையூறு களை யகற்றிக் காப்பவர்.

980 **யஜ்ஞஸாதந:** யஜ்ஞங்களின் வழியாகத் தம்மை யடையும்படி நிற்பவர்.

981 **யஜ்ஞாந்தக்ருத்:** யாகத்தின் பலனான தத்துவ ஞானத்தை யுண்டாக்குமவர்.

982 **யஜ்ஞகுஹ்யம்:** யாகத்தின் ரஹஸ்யமாயிருப்பவர்.

983 **அந்நம்:** அன்னம்போல் பக்தர்களால் அனுபவிக்கப் படுகிறவர்.

984 **அந்நாத:** தம்மை யநுபவிப்பவர்களைத் தாமும் போக்யமாக அநுபவிப்பவர்.

985 **ஆத்மயோநி:** பாலுடன் சர்க்கரையைச் சேர்ப்பது போல் இப்படித் தம்மை யனுபவிப்பவர்களைத் தம்மிடம் சேர்ப்பிப்பவர்.

986 **ஸ்வயம்ஜாத:** ஒருவருடைய பிரார்த்தனையும் காரணமாக வல்லாமல் தாமே தமது ஸங்கல்பத்தினால் அவதரிப்பவர்.

987 **வைகாந:** அவதரித்து அடியார்களின் ஸம்ஸார துக்கங்களைக் கல்லியெடுப்பவர்.

988 **ஸாமகாயந:** முக்தர்கள் தம்மையநுபவித்து ஸாமகானம் செய்ய நிற்பவர்.

989 **தேவகீநந்தந:** தேவகியின் புத்திரராகத் தோன்றியவர்.

990 **ஸ்ரஷ்டா:** உலகங்களைப் படைப்பவர்.

991 **க்ஷிதீச:** அவதாரங்களினால் மண்ணின்பாரத்தை நீக்குவதனால் பூமிக்கு ஈச்வர்.

992 **பாபநாசந:** அவதார சேஷ்டிதங்களை யனுபவிப்பவர்களின் பாவங்களைத் தொலைப்பவர்.

993 **சங்கப்ருத்:** பாஞ்சசன்னியத்தைத் தமது திருப் பவளச் செவ்வாயின் அமுதத்தினால் போஷிப்பவர்.

994 **நந்தகீ:** நந்தகமென்னும் வாளையுடையவர்.

995 **சக்ரீ:** திருவாழியாழ்வானை யுடையவர்.

996 **சார்ங்க தந்வா:** சார்ங்கமென்னும் வில்லாண்டான்.

997 **கதாதர:** கௌமோதகியென்கிற கதையைத் தரிப்பவர்.

998 **ரதாங்கபாணி:** எப்போதும் கைகழலா நேமியான்.

999 **அக்ஷோப்ய:** தமது மஹிமையினால் யாராலும் வெல்லக் கூடாதவர்.

1000 **ஸர்வ ப்ரஹரணாயுத:** எல்லாத் துன்பங்களையும் தீர்க்குமவையான பல ஆயுதங்களையுமுடையவர்.

**ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய**

**ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை**

**முற்றிற்று**